# கல்கி

KALKI
9.6.96
ரூ. 3.00



## மலடாகும் ஆபத்து: ஆண்களே ஜாக்கிரதை!

## 'இந்தியன்' படத்துக்கு போலீஸ் ஸ்டேஷனில் டிக்கெட்?

சினிமாவில் புதிய அலை :

## விற்பனைக்கு 'தேசபக்தி'!




# ட்ரஸ்ட் திரு.வி.க.நகர் பெனி:.பிட் :.பண்ட் லிமிடெட்

| | |
|---|---|
| தலைமை அலுவலகம் | : 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யு, (திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்), சென்னை - 600 082. போன் : 5378690 |
| பாரீஸ் கிளை | : 8/2, ஸ்டரிங்கர்ஸ் தெரு, சென்னை - 600 108. போன் : 565760 |
| தி. நகர் கிளை | : 20, ரங்கநாதன் தெரு, சென்னை - 600 017. போன் : 4344324 |
| அண்ணா நகர் கிளை | : AC-38, 4வது தெரு, KHM ஆஸ்பத்திரி பின்புறம், அண்ணா நகர், சென்னை-40. |



**பாதுகாப்பான முறையில் சேமித்து வளருங்கள்**

## எக்செல் பாண்டு - A திட்டம்

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 9,000 | 2 ஆண்டு | 21% |

பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்

## எக்செல் பாண்டு - B திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 9,000 | 2 ஆண்டு | ரூ. 13,648 |

## திருமூர்த்தி பாண்டு

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 20,000 | 5 ஆண்டு | ரூ. 60,000 |

## வசந்தம் பாண்டு

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 7,000 | 40 மாதம் | ரூ. 14,000 |

## பென்ஷனர் வைப்பு நிதி

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 10,000 | 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு | 21% |

★ பென்ஷனர், ஓய்வு பெற்றோர், முதியோர் (50 வயதிற்கு மேல்), விதவைகள், ஊனமுற்றோர் இத்திட்டத்தின் கீழ் பயன்பெறலாம்.
★ பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்.

## பென்ஷனர் மறுமுதலீட்டு திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 5,000 | 1 ஆண்டு | 6,157 |
| | 2 ஆண்டு | 7,582 |
| | 3 ஆண்டு | 9,337 |
| | 40 மாதம் | 10,000 |

## சிறப்பு ஊக்கத்தொகை 1%

ரூ.5000 அதற்கு மேலும்
காலம் 1 ஆண்டு அதற்கு மேலும்

★ சேமிப்பு திட்டம் 12% வட்டி நாள் கணக்கில் வட்டி கணக்கிடப்படும்.
★ தங்க நகைகள் பேரில் ஒரு சவரனுக்கு ரூ. 2400 வரை கடன் வழங்கப்படும்.
★ சென்னை மாநகர வீடு/ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும். குறைந்த வட்டி, கடன் மிக விரைவாக வழங்கப்படும்.
★ பங்குதாரர்களுக்கு மட்டும்
★ ரூ.10 செலுத்தி பங்குதாரர் ஆவீர்.

## வேலை நேரம்

| | |
|---|---|
| தலைமை அலுவலகம் | : 9 முதல் 5, ஞாயிறு 9 முதல் 1 |
| கிளைகள் | : 10 முதல் 5, ஞாயிறு 10 முதல் 1 |

உணவு இடைவேளை இல்லை. செவ்வாய் விடுமுறை.

"என்னுடைய அரசியல் வாழ்க்கை என் கல்யாணத்திற்கு அப்புறம் தான் துவங்கியது" என்றார் புதிய அரசின் மீன்வளத்துறை அமைச்சர் ஜெனிபர் சந்திரன்.

தூத்துக்குடியில் இரு வகுப்பினரிடையே ஏற்பட்ட மோதலால் கலவரம் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்ததை சமாளித்து, சகஜ நிலைக்குக் கொண்டு வரும் பொருட்டு, ஆலடி அருணாவுடன் தூத்துக்குடி சென்று திரும்பியிருந்தவரை விருந்தினர் மாளிகையில் சந்தித்தோம். அங்கு தங்கியிருந்த மற்ற அமைச்சர்களின் அறைகளுக்கு உள்ளேயும் வெளியேயும் ஏகப்பட்ட கறை வேட்டிகள் இருக்க, ஜெனிபர் அறை மிகவும் அமைதியாக இருந்தது.



# கடல், தாய் வீடு; கழகம், புகுந்த வீடு!

ஜெனிபர் பிறந்து, வளர்ந்து, படித்ததெல்லாம் தூத்துக்குடியில்தான்! மீனவக் குடும்பம். ஆனால் அப்பா கடலுக்குப் போகாமல் வேறு தொழில்கள் செய்து கொண்டிருந்தாராம்.

"என் புகுந்த வீடு, திராவிட உணர்வுகளை அடிப்படையாகக் கொண்டது. மாமனார், என் கணவர் சந்திரன் ஆகியோர் தீவிர கழகத் தொண்டர்கள். நான் கலைஞரின் எழுத்து மற்றும் பேச்சுக்களால் கவரப்பட்டு 1981ல் கழகத்தில் உறுப்பினராகச் சேர்ந்தேன்" என்றார் ஜெனிபர்.

பட்டப்படிப்பை தபாலிலேயே முடித்திருக்கிறார் அமைச்சர்.

திருச்செந்தூரிலுள்ள அமலி நகரில்தான் அமைச்சரின் புகுந்த வீடு இருக்கிறது. இன்னமும் கடலுக்குச் சென்று வாழ்க்கையை நடத்தும் குடும்பம். ஒரே மகன் விஜயன் திருச்செந்தூரிலேயே படித்து வருகிறான். வயது 12.

"நான் தேர்தலில் போட்டியிடுவது இது தான் முதல் முறை. பிரசாரத்திற்குச் சென்ற இடங்களில் எல்லாம் மக்கள் சொன்ன பிரச்னை, குடிநீர், சாலைவழி, பஸ் வசதி, ஆகியவைதான். சட்டமன்ற உறுப்பினர் என்ற அடிப்படையில் என் தொகுதியிலுள்ள இந்தப் பிரச்னைகளைத் தீர்ப்பது தான் முதல் கடமை" என்கிறார்.

அமைச்சருக்கு தேர்தல் ஸீட் கொடுத்த போது, (திருச்செந்தூர் தொகுதி) உள்ளூரில் கட்சியினரிடையே கொஞ்சம் கசமுசா இருந்தாலும் அப்புறம் சரியாகிவிட்டதாம்.

ஜெனிபர் சந்திரன் மிகவும் ஆர்வமாகக் கழகப் பணி ஆற்றுவதைக் கண்ட மாவட்டச் செயலாளர் பெரிய சாமி, மேலிடத்தில் சொல்லி மாவட்ட மகளிர் அணி அமைப்பாளர் பொறுப்பையும் ஜெனிபருக்கு வாங்கிக் கொடுத்திருக்கிறார்!

"தமிழகத்தில் மீனவர்களுக்குப் பல பிரச்னைகள் இருக்கின்றன. மத்திய-மாநில அரசின் பல திட்டங்கள் முந்தைய ஆட்சி காலத்தில் மீனவர்களைச் சென்று அடையவேயில்லை. முதலில் அதைச் சரி செய்ய வேண்டும். தவிர, வங்காள குடாக் கடலில் மீனவர்களின் பாதுகாப்பு! இது சர்வதேசப் பிரச்னையாகையால் முதல்வரின் அறிவுரைப்படிச் செயல்படுவேன்" என்றார் ஜெனிபர்.

"அமைச்சராக அறிவிக்கப்பட்டபின் கலைஞரைச் சந்தித்தபோது என்ன சொன்னார்?"

"நீ அமைச்சர் பதவியை எதிர்பார்த்தாயா? என்று கேட்டார். நான், இல்லை என்று சொன்னேன். 'எந்தப் பிரச்னையாக இருந்தாலும் தயங்காமல் ஆலோசனை கேள்' என்று சொல்லியிருக்கிறார்!" என்றார் ஜெனிபர்.

சந்திப்பு : ப்ரியன்

வண்ணப்படம் : பேஜர் கே. மூர்த்தி

# ஜாவா? ஜாவா?

பத்தாயிரத்துச் சில்லறை மண்டை வால்வுகளும், இருபதாயிரம் 'ரிலே'க்களுமாக ஒரு குட்டியானை சைஸில் முதல் கம்ப்யூட்டர், உலகில் வந்து ஐம்பது வருடம் ஆகிவிட்டது. அப்போதெல்லாம், மென் பொருள் (SOFTWARE) என்பது இரண்டாம் பட்சம்தான். கம்ப்யூட்டர்தான் பிரதானம்.

உலகம் மாறிவிட்டது. கம்ப்யூட்டர் அளவு சிறுத்து, மேசை மேலோ மடியிலோ வைத்து இயக்கக்கூடிய பெட்டியாகிவிட, மென் பொருளின் முக்கியத்துவம் கூடிக் கொண்டே போகிறது. கம்ப்யூட்டரை வாங்கி வைத்துக் கொண்டு, அதை உபயோகப்படுத்த மென்பொருளை எழுதியதுபோய், மென் பொருளை வாங்கி வைத்துக்கொண்டு, அதை இயக்கத் தோதான கம்ப்யூட்டரைத் தேடுகிற காலம்...

உதாரணமாக, விண்டோஸ்-95 மென் பொருளை வாங்குவதாக வைத்துக் கொள்வோம். அதைப் போட்டு வைக்கக் கம்ப்யூட்டரில் 200 மெகாவாட் அளவு இடம் தேவைப்படும். சீராக இயக்க வைக்க, குறைந்த பட்சம் 8 மெகாபைட் அடிப்படை நினைவுத் திறனாவது உள்ள கம்ப்யூட்டராக இருக்க வேண்டியதும் அவசியம். இத்தனைக்கும், விண்டோஸ்-95ன் சகல அம்சங்களையும், பொழுது விடிந்தால் யாரும் பயன்படுத்தப்போவது இல்லை.

உலகம் முழுதும் லட்சக்கணக்கான கம்ப்யூட்டர்களை இணைக்கும் இண்டர்நெட் வலைப்பின்னல் பிரபலமாகி வரும் இன்றைய சூழ்நிலையில், கம்ப்யூட்டர் மென்பொருளுக்கும் வன்பொருளுக்கும் காக ஏகமாகச் செலவழிக்க வேண்டுமா என்று பலருக்கும் ஆதங்கம்.

'தேவைப்படும்போது தேவையான மென் பொருளை வலைப்பின்னல் மூலம் இறக்குமதி செய்துகொண்டு, வேலை முடிந்ததும் திருப்பியனுப்பி விட்டால் செலவு கணிசமாகக் குறையுமே'...

"ஆமாப்பா... ஆமா" என்று யாரும் எதிர்பார்க்காதவிதமாக, பெரிய கம்ப்யூட்டர் கம்பெனிகளில் ஒன்றான சன் மைக்ரோ சிஸ்டம் திடமாக ஆமோதிக்க, 1993 'ஜாவா' சுப ஜனனம்.

பேசிக், கொபால், சி ப்ளஸ் போல, 'ஜாவா' ஒரு கம்ப்யூட்டர் மொழி. பொருள் முனைந்த மொழி (OBJECT ORIENTED LANGUAGE) என்று பரிபாஷையில் குறிப்பிடுவார்கள். தகவலையும், அதை இயக்கத் தேவையான செயல்பாட்டு ஆணைகளையும் ஒன்றாகக் கலந்து நெறிப்படுத்துவது பொருள் முனைவின் சாராம்சம். இவ்வகையில் 'சி ப்ளஸ் ப்ளஸ்' தான் ஜாவாவின் முன்னோடி.

ஜாவா எப்படிச் செயல்படுகிறது?

## நீச்சல் தெரியுமா கண்ணே?

முல்லாவைக் க்ல்யாணம் செய்துகொள்ள இரண்டு பெண்கள் விரும்பினார்கள். "முல்லா, எங்கள் இரண்டு பேரில் நீங்கள் யாரை மிகவும் நேசிக்கிறீர்கள்?" என்று கேட்டனர்.



முதலில், அடிப்படையான ஜாவா ஆணைத் தொடரை இண்டர்நெட்டில் இணைக்கப்பட்ட உங்கள் கம்ப்யூட்டரில் விதைக்க (seed) வேண்டும். எல்லாவிதமான கம்ப்யூட்டர்களிலும் இயங்கும் விதமாக உருவாக்கப்பட்ட, தகவல் வீதியில் 'மேய' உதவும் இந்த மென்பொருள் (BROWSER) மிகக் குறைவான இடத்தையே ஆக்கிரமித்துக் கொள்ளக் கூடியது. இந்த 'ப்ரவுசர்' தவிர வேறு எந்த மென்பொருளுமே உங்கள் கம்ப்யூட்டரில் இருக்கத் தேவையில்லை என்பது முக்கியமான விஷயம்.




வேர்ட் பிராசசர் மென்பொருள் உங்கள் கம்ப்யூட்டரில் இல்லாமலேயே அதை உபயோகப்படுத்தி 'ஒரு பக்கக் கதை' எழுத வேண்டுமா? கவலையை விடுங்கள். தகவல் வீதியில் 'திரிந்து' கொண்டிருக்கும் ஏதாவது ஒரு வேர்ட் பிராசசர் மென்பொருளை (APPLET என்று இவற்றைக் குறிப்பிடுவார்கள்) ப்ரவுசர் மூலம் தூண்டில் போட்டு உங்கள் கம்ப்யூட்டரின் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டு கதையை எழுதி அச்சடித்துவிட்டு, அந்த அப்லெட்டைத் திருப்பியனுப்பினால் தீர்ந்தது வேலை!

சகலவிதமான சேவைகளுக்குமான அப்லெட்டுக்களை ஜாவா கொண்டு மும்முரமாக உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இண்டர்நெட்டின் பகுதியான 'வெப்' மூலம் ஒளி, ஒலி ரூபத்தில் தகவலைச் சுளுவாகக் கொடுக்க - வாங்கத் தேவையான அப்லெட்டுக்களும் இதில் அடங்கும்.

ஜாவா, கற்றுக் கொள்ள சி, சி பிளஸ்ஸை விட சுலபமானது.

'ஜாவாவைச் சும்மாவே தருகிறோம். வாங்கிக்கொண்டு போங்கள்' என்று 'சன்' நிறுவனம் தாராள மனத்தோடு அறைகூவல் விடுக்க, "கோர்பசேவ் சோவியத் யூனியனுக்குச் செய்ததை இவர்கள் கம்ப்யூட்டர் தொழிலுக்குச் செய்கிறார்கள்" என்பதுபோல் நிறைய முணுமுணுப்பு.

ஜாவா இன்னும் பிரபலமாகும்போது, தற்போதைய மாதிரி கம்ப்யூட்டர்களை வாங்கக் கூட்டம் சேராது. அடிப்படை அம்சங்கள் மட்டும் அமைந்த மிகமிக மலிவான வலைப்பின்னல் கம்ப்யூட்டர்கள் (NETWORK COMPUTER ) பெருகும்.

அப்போது பலான கம்ப்யூட்டர் கம்பெனிகளும் எதிர்நோக்க வேண்டிய பிரச்சனை- வாழ்வா, JAVA?

— இரா.முருகன்

---

இவ்வாறு கேட்டால் எப்படி பதில் கூற முடியும்? ஏதேனும் ஒரு நிகழ்ச்சியுடன் இணைத்துக் கேளுங்கள்" என்று கூறினார் முல்லா.

"நாங்கள் இரண்டு பேரும் ஆற்றில் விழுந்து விட்டால் நீங்கள் யாரைக் காப்பாற்றுவீர்கள்?" என்று கேட்டாள் ஒருத்தி. அவள் மிகவும் இளமையாகவும், அழகாகவும் இருந்தாள்.

மற்றொரு பெண் வயதானவளாகவும், பருமனாகவும், ஆனால் நிறையப் பணம் உடையவளாகவும் இருந்தாள்.

முல்லா, அந்தப் பணக்காரப் பெண்ணைப் பார்த்து, "உனக்கு நீச்சல் தெரியுமா கண்ணே!" என்று கேட்டார்!

'முல்லாவின் வேடிக்கைக் கதைகள்' நூலிலிருந்து.

— ஆர். பிரகாசம்



"முழுக்க முழுக்க தேச பக்தியை மையமாக வைத்துப் படம் எடுத்தால் விருது கிடைக்கலாம். வியாபாரம் ஆகுமா?"

— அர்ஜுன்



"வணிகப்படங்களை முழுமையான தேசிய-சமூக நோக்குடன் எடுப்பதற்கான சாத்தியங்கள் எதுவும் இன்று இல்லை"

— ஷங்கர்



''இங்கு வியாபாரக் குறிக்கோள் தவிர யாருக்கும் வேறு சிந்தனை இல்லை. ஆனால் மக்களைத் தொடர்ந்து ஏமாற்ற முடியாது."

— லெனின்

''தேசபக்தியைக் கருவாகக் கொண்டு வருகிற படங்கள், அதனளவில் முழுமை அடையாதவையாக இருப்பதற்குக் காரணம், இயக்குநர்களுக்குப் போதிய தகவல் அறிவு இல்லாமல் இருப்பதுதான்."

— மணிவண்ணன்



பர்மா பஜார் வளாகத்திலோ, பலசரக்குக் கடைகளிலோ, புடைவை ஷோ-ரூம்களிலோ போய், "இங்குள்ள உருப்படிகளில் அதிகம் விற்பது எது?'' என்று கேட்டால் சட்டென்று சொல்லி விடுவார்கள். ஆனால், சினிமாக்காரர்களிடம் போய், "என்ன மாதிரிப் படம் நன்றாக ஓடும்?" என்று கேட்டால் திருதிருவென விழிப்பார்கள். "மக்கள் விருப்பம் எது என்பதைப் புரிந்து கொள்ள முடியாததுதான் இந்தத் துறைக்கு இருக்கிற ஒரே சவால்'' என்று தவறாமல் சொல்வார்கள். காதல் படங்கள், குடும்பப் படங்கள், கிரைம் படங்கள், அரசியல்-சமூக அவலங்களைப் பிடித்துக்

''துப்பாக்கி, ... வேறொன்றும் தோன்ற ... யோசிக்க முடிவதில்லை.''

# விற்பனைக்கு தேசபக்தி!

இழிக்கிற படங்கள், ஆக்ஷன் படங்கள், நகைச்சுவைப் படங்கள் இப்படி ஒவ்வொரு கால கட்டத்தில் ஒவ்வொரு விதப் படங்கள் வெற்றி பெற்றிருக்கின்றன.

அமோக வெற்றி கூட வேண்டாம் - ஒரு படம் வர்த்தக ரீதியில் கையைக் கடிக்காமல் போய் விட்டால் போதும்; புற்றீசல் மாதிரி ஒரு ஆறுமாத காலத்துக்கு அதே பாணிப் படங்கள் வந்து கொண்டே இருக்கும். பிறகு வேறொரு ரகம் வெற்றி பெற, 'டிரெண்ட்' உடனே மாறிப்போகும்.

ஆனால், சுமார் நாலைந்து ஆண்டுகளாக எவ்வித மாற்றமும் இல்லாமல் தமிழ் சினிமாக் கதைகளுக்கு உரம் போட்டுக் கொண்டிருப்பது, 'தேசபக்தி' என்கிற விஷயம். அரசியல் வாதிகளிடமெல்லாம் படாதபாடுபட்டு ஆன பிறகு சினிமாக்காரர்களிடம் தஞ்சம் புகுந்திருக் கிறது தேசபக்தி.

ஐம்பதுகளிலும் அதற்கு முன்பும் 'தியாக பூமி', 'அந்தநாள்', 'நாம் இருவர்', 'கப்பலோட்டிய தமிழன்', 'கட்டபொம்மன்' உள்ளிட்ட பலபடங்கள் தேசபக்தி ஊட்டும் விதமாக வந்தன. அதற்குப் பின்னாலும் கூட அவ்வப்போது இந்த ரகப் படங்கள் வந்து கொண்டுதான் இருந்தன என்றாலும் இன்றைக்கு வருகிற தேசபக்திப் படங்களின் எண்ணிக்கையும் அவை 'செய்ய'ப்படுகிற விதமும் மிகுந்த ஆச்சர்யமும் அதிர்ச்சியும் தரும் படியாக இருக்கின்றன.

இந்தப் புதிய அலையின் ஆரம்பம் மணிரத்தினத்தின் 'ரோஜா' எனலாம். காஷ்மீர் தீவிரவாதிகளின் பிடியில் சிக்கிக் கொள்கிற கதாநாயகன், மீண்டு வரு கிற



• ரோஜா : சரியான கலவை விகிதம்

• இந்தியன் : "கமர்ஷியல் படம்தான்!"



• அந்திமந்தாரை : வந்தால் தெரிந்துவிடும்!

வரையிலான சம்ப வங்களை, விறுவிறுப்பும் போதுமான கேளிக்கை அம்சங்களும் கலந்து படைத்து, வெற்றிகரமான ஒரு புதிய பார் முலாவை அறிமுகப்படுத்தினார் மணிரத்னம்.

இருபது சதம் தேசபக்தி, நாற்பது சதம், திகில், முப்பது சதம் காதல், பாடல்கள், அழு குணர்ச்சி, பத்து சதம் செண்ட்டிமெண்ட் என்பது அவர் அறிமுகப்படுத்திய கலவை விகிதம்.

இந்தக் கலவை விகிதத்தில் சற்று கூட்டியும் குறைத்தும், கவர்ச்சி, நகைச்சுவை, வன்முறை போன்ற வேறு சில விஷயங்களைக் கூடுதலாகச் சேர்த்தும் அதன் பின் ஏராளமான படங்கள் வரத் தொடங்கின.

ரோஜாவுக்குப் பின் சுமார் எழுபத்தைந்து படங்கள், தேசபக்தியை மையமாக வைத்துத் தயாரிக்கப்பட்டு வெளிவந்திருக்கிறதாகத் தெரியவருகிறது.

இது போன்ற விஷயங்களைப் புள்ளி விவரமாகத் தருவதில் விற்பன்னரான பிலிம் நியூஸ் ஆனந்தனைத் தொடர்பு கொண்டு விசாரித்தபோது, அவர் தம் ஞாபகத்திலிருந்தே, 'ரோஜா' தொடங்கி சமீபத்திய 'சிறைச்சாலை', 'இந்தியன்' வரை டஜன் டஜனாக அடுக்கிக் கொண்டே போனார்!

இந்தப் படங்களின் பொதுவான அம்சங்களைச் சுலபமாக இனம் பிரித்து விடலாம். கதாநாயகனைத் தவிர, மிச்சம் எல்லோரும் அயோக்கியர்களாக இருப்பார்கள். கடத்தல் செய்வார்கள். ராணுவ - பாதுகாப்பு ரகசியங்களை வெளிநாட்டினருக்கோ (அதிகமாக பாகிஸ்தான்) உள் நாட்டிலேயே குழிபறிக்கக் காத்திருக்கும் வில்லனுக்கோ விற்று விடுவார்கள். அல்லது நல்லவர்களுக்குத் தொடர் தொல்லைகள் தந்து கொண்டிருப்பார்கள். படம் முழுக்கக் கதாநாயகனைத் துரத்த வைத்து விட்டு, கடைசியில் தலைமைச் செயலகம், அமைச்சர் இல்லம், நீதிமன்ற வளாகம் (சமீபத்தில் தில்லி 'செங்கோட்டை'!) இதுபோன்ற முக்கிய இடங்களில் குண்டு வைக்கும் போது பிடிபட்டு விடுவார்கள். அல்லது பிரதமர் போன்ற முக்கியப் பிரமுகர்களைக் கொல்ல முயன்று, கதாநாயகனால் சுட்டுக் கொல்லப்படுவார்கள். (அதிகம் உயிரோடு பிடிபடுவதில்லை)

இது போன்ற படங்களில் வரும் கதாநாயகர்கள் கூடுதல் மிடுக்கும், நெஞ்சு நிறைய தேசபக்தியும் கடமையைத் தவிர வேறெதிலும் கவனம் செலுத்தாதவர்களாகவும் இருந்தாலும் ரசிகர்களுக்காகக் கொஞ்சம் கனவு கண்டு, காதலிகளுடன் ஆடிப்பாடத் தயங்குவதில்லை. அவ்வண்ணமே, நாட்டுக்காகக் குடும்பத்தை இழக்கத் தயாராவதற்கும்.

வணிக ரீதியில், 'பிரும்மாண்டமாகத் தயாரிக்கப்படுவதாக' விளம்பரம் செய்வதற்கு இத்தகைய படங்களில் அதிக வாய்ப்பு இருப்பதாகச் சொல்கிறார்கள். நிறைய துப்பாக்கிகள் வெடிக்க, பெரிய பெரிய கட்டடங்கள் குண்டு வைத்துப் பிளக்கப்பட்ட, அடர்ந்த கானகங்கள், கரடு முரடான மலைப் பகுதிகளில் (தீவிரவாதிகளின் இருப்பிடம்) படப்பிடிப்பு நடத்த - இவை போன்றவைகளுக்கு இந்த ரகப் படங்களில் வாய்ப்பு அதிகம்.

இதில் கவனிக்கத்தக்கது, மேற்சொன்ன விஷயங்களில் கவனம் திசை திருப்பப்படுவதால், அடிநாதமான 'தேசபக்தி' பெரும்பாலான படங்களில் அநாதையாக நடுத்தெருவில் விடப்பட்டு விடுகிறது. அல்லது வில்லனோடே சேர்த்து 'சுட'ப்படுகிறது!

வியாபார ரீதியில் நிறைய எதிர்பார்ப்புகளோடு, போட்ட பணத்தை எடுக்க முடியுமா என்கிற ஒரே சிந்தனையில் இருக்கிறவர்களைக் குறை சொல்லிப் பிரயோஜனமில்லைதான். ஆனால் 'தேசபக்தி' என்கிற உணர்வை பாதிக்

க்கூடிய ஒரு விஷயத்தை, வணிகத் தேவைக் கேற்ப வளைத்தும் நெளித்தும் மலினப்படுத்து வது ஏற்கக் கூடியதாக் இல்லை.

இதுபற்றி திரைப்படத் துறையினர் என்ன கருதுகிறார்கள்?

தேசவகன், பிரதாப், ஜெய்ஹிந்த் தொடங்கி, சமீபத்திய செங்கோட்டை வரை தேசபக்தியை விடாமல் பற்றிக் கொண்டிருக் கிற நடிகர்-இயக்குநர் அர்ஜுன் சொன்னார் :

"மக்கள் பொதுவாக, பொழுது போக்குக் காகவே படம் பார்க்க வருகிறார்கள். இரண் டரை மணி நேரத்திற்குள் காதல், சிரிப்பு, சோகம், வேகம், வீரம், சென்ட்டிமெண்ட் என்று எல்லாவற்றையும் சரிவிகிதத்தில் கலந்து தர வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். இத் தனைக்கும் நடுவில் ஏதாவது ஒரு நல்ல விஷயத்தைச் சொல்ல வேண்டிய கடமை எனக்கு இருப்பதாகக் கருதுவதால்தான் என் படங்களில் தேசபக்தியையும் ஓர் அம்சமாக வைக்கிறேன். கமர்ஷியல் படத்தில் தேசபக்தி ஊட்டுவது தவறு என்று எப்படிச் சொல்ல முடியும்? முழுக்க முழுக்க தேசபக்தியை மைய மாக வைத்துப் படம் எடுத்தால் விருது கிடைக் கலாம். வியாபாரம் ஆகுமா? ஒன்று சொல்ல லாம். இது போன்ற படங்களில், கேளிக்கை அம்சங்கள் வரம்பு மீறி, ஆபாசமாகி விடாமல் பார்த்துக் கொண்டால் போதும். சினிமாக்காரர் களைக் குற்றம் சொல்ல வேண்டாம். மக்கள் ரசனையை ஒட்டித்தான் நாங்கள் செயல்படுகி றோம்."

தமது ஜென்டில்மேன், காதலன் படங் களுக்குப் பிறகு 'இந்தியன்' தந்திருக்கும் இயக் குநர் ஷங்கர், பரவலாகப் பேசப்படுவது போல 'இந்தியனை'த் தான் ஒரு தேசபக்திப்படம் என்று நிச்சயம் சொல்ல மாட்டேன் என்கிறார்.

"அது ஒரு முழுமையான கமர்ஷியல் படம், பொழுது போக்குப்படம் என்பதைத் தவிர, வேறெந்த முத்திரையும் விழுவதை நான் ஏற்க மாட்டேன். ஆனால், படத்தின் அடிநாதமாக ஒரு சீர்திருத்த சிந்தனை, தேசிய நோக்கு அமைக்கப் பட்டதன் காரணம், படத்தின் கேளிக்கை அம் சங்களைத் தாண்டி அது மனத் தில் பதியாதா என்கிற எண்ணத்தில்தான்!" என்கிறார்.

வணிகப்படங்களை முழுமையான தேசிய- சமூக நோக்குடன் எடுப்பதற்கான சாத்தியங் கள் எதுவும் இன்று இல்லை என்று சொல்லும் ஷங்கர், "ஒரு நல்ல விஷயம் சொல்ல வேண்டும் என்கிற எண்ணம் இயக்குநருக்கு அடிப்படை யில் இருக்குமானால் அதை அலுப்பூட்டாமல் ஜனரஞ்சகமாகச் சொல்ல முடியும்" என்று தாம் உறுதியாக நம்புவதாகச் சொன்னார்.

"சினிமா என்பது பார்த்ததும் மறந்து விடக் கூடிய விஷயம். சினிமா மூலம் மிகப் பெரிய சமூக மாற்றங்கள் சாத்தியம் என்பதையெல் லாம் நான் நம்பத் தயாராக இல்லை. ஆனால், வியாபாரத்திலும் நேர்மை என்பது போல, பொழுதுபோக்குப் படங்களிலும் சில நல்ல விஷயங்களை - போதனையாக இல்லாமல் லேசாகத் தொட்டுக் காட்டுகிறேன். சரி, தவறு என்பது தாண்டி, இது 'ஸர்வைவல்' பிரச்னை இன்று" என்கிறார் ஷங்கர்.

தமது பிரத்தியேக அரசியல் நையாண்டி மூலம் கவனம் பெற்றிருக்கும் இயக்குநர் மணி வண்ணன், "வணிகப் படங்களில் தேசபக்தியைக் கையாள்வதில் என்ன தவறு?" என்று கேட்கிறார்.

"இயல்பாகவே தேசிய எண்ணம் இல்லாத ஒரு இயக்குநரால் சத்தியமாக ஒரு தேசபக்திப் படம் - அது கமர்ஷியல் முலாம் பூசப்பட்ட தாகவே இருக்கட்டும் - எடுக்க முடியாது என்று உறுதியாகச் சொல்வேன். அப்படி 'தேசபக்தி' யைக் கருவாகக் கொண்டு வருகிற படங்கள், அதனளவில் முழுமை அடையாதவையாக இருப்பதற்குக் காரணம், இயக்குநர்களுக்குப் போதிய தகவல் அறிவு இல்லாமல் இருப்பது தான். தீவிரவாதிகள், வெடி குண்டு இவற்றைத் தாண்டிய ஒரு அசல் தேசியப் பார்வை - அணுகுமுறை அவர்களுக்கு இல்லாமல் போவதுதான் அத்தகைய படங்களின் தரமின் மைக்குக் காரணமே தவிர, அவர்களின் எண்ணம் - ஆர்வம் உயர்வானதுதான்!" என் கிறார் இவர்.

"யாருக்கும் அர்ப்பணிப்பு உணர்வு இல்லை. வணிகப்படங்களேயானாலும் வருகிற அத்தனை படங்களுமா தரமாக இருக்கின்றன? 'தேசபக்தி' என்கிற விஷயத்தை வியாபார வெற்றிக்கு ஒரு துருப்புச்சீட்டாகப் பயன்படுத் தலாம் என்று நினைக்கிறார்களே தவிர அதை

"கொஞ்ச நாளா என் மனைவி வாயையே திறக்கிறதில்லை!"

"சந்தோஷப்பட வேண்டிய விஷயம் தானே?"

"அவள் 'மௌனப் புரட்சி' செய்து கிட்டிருக்காளோன்னு பயமாயிருக்குடா!"

— ஞா. ஞானமுத்து





மேற்கு வங்காளத்தில் உள்ள ஃபராக்கா என்ற இடத்தில் பாசன இலாகாவில் ரோட்ரோலர் வண்டி டிரைவராக வேலை பார்த்து வந்த மிலன்தாஸ் என்பவர் திடீரென்று இறந்து விட்டார். இதை அறியாத அந்த அலுவலகம் அவரை மால்டா நகருக்கு மாற்றல் செய்து உத்தரவையும் அவருக்கு அனுப்பிவிட்டது.

இந்த உத்தரவைப் பார்த்தார் மிலனின் தம்பி நிமல். அண்ணன் தம்பி இருவரும் ஒரே மாதிரியான உருவம் படைத்தவர்கள். அடையாளம் காண்பது கஷ்டம். காலமாகிவிட்ட அண்ணனின் மாற்றல் உத்தரவைக் கண்ட நிமல் ஒரு ஐடியா செய்தார். தன் அண்ணியையும் அண்ணனின் மூன்று வயதே ஆன மகளையும் வீட்டை விட்டுத் துரத்தி விட்டார். பிறகு, மாற்றல் உத்தரவை எடுத்துக் கொண்டு மால்டா நகருக்குப் போய் தாம்தான் மிலன் தாஸ் எனக் கூறி, ரோடுரோலர் டிரைவர் பணியில் சேர்ந்து கொண்டார்.

இப்படி அவர் 'டூப்ளிகேட்டாக' அரசுப் பணியில் இருந்தது எவ்வளவு காலம் தெரியுமா? 23 ஆண்டுகள்! இவருக்கு இப்பொழுது வம்பு டி.என். சேஷன் உருவில் வந்து சேர்ந்துள்ளது!

வாக்காளர் அடையாள அட்டைக்காகப் புகைப்படம் எடுத்துக் கொள்ளப் போய், அதற்காக க்யூ வரிசையில் நின்றார். அதே வரிசையில் 26 வயதான ஒரு இளைஞரும் நின்று கொண்டிருந்தார்!

அவர் வேறு யாருமல்ல... இருபத்தி மூன்று வருடத்திற்கு முன் நிமல் வீட்டை விட்டுத் துரத்திய அண்ணனின் மகள்தான்!

சித்தப்பா தம் பெயரை மிலன் தாஸ் எனக் கூறுவதைக் கேட்ட அந்த இளைஞர் ஆச்சரியமடைந்தார். அவர் வேலை பார்க்கும் அலுவலகம் போய் விசாரித்தார். சித்தப்பா செய்த தில்லு முல்லு அவருக்குப் புரிந்தது. ஆனால் அந்த அலுவலக அதிகாரிகள் இப்பிரச்னையை எப்படி தீர்ப்பது என தெரியாமல் முழிக்க, அந்த இளைஞர் இப்பொழுது வழக்கு தொடர்ந்துள்ளார்!

ஆதாரம் : சண்டே

தகவல் : எஸ். ஆலன்

---

உணர்வு பூர்வமாக அணுக வேண்டும் என்பதை நினைத்துப் பார்க்கக் கூட மறுக்கிறார்கள்'' என்று வருத்தப்பட்டார் எடிட்டர் லெனின்.

''நேற்றைக்கு, சினிமாதான் இலக்கியம் வளர்த்தது என்று சொன்னார்கள். இன்றைக்கு இருக்கிற நிலையில் சினிமாதான் தேசபக்தியையும் வளர்த்தது என்பார்கள்! ஆனால் கப்பலோட்டிய தமிழனும் வீரபாண்டிய கட்டபொம்மனும் தேசபக்தி வளர்க்க உதவின என்பதை மறுக்க முடியாதுதான். நம் கேள்வி இன்றைக்கு எடுக்கிற படங்கள் பற்றித்தான் அல்லவா?'' என்று நம்மோடு கைகோத்தார் லெனின்.

'''காந்தி', தரமாகவும் அதே சமயம் கமர்ஷியல் வெற்றி தரத்தக்கதாகவும் எடுக்கப்படவில்லையா? நான் முதலில் சொன்னதுதான். இன்றைய இயக்குநர்களிடம் கமிட்மென்ட் இல்லை. தேச வரலாறு தெரியாமல் சுதந்தரப் போராட்டக் காலத்துப் படங்கள் எடுக்கிறார்கள். பின் எப்படி அது சிறப்பாக வரும்? ஜி.வி.ஐயர், தம் 'விவேகானந்தர்' படத்துக்காகப் பதினைந்து வருடங்கள் ஆராய்ச்சியிலேயே கழித்திருப்பதாகத் தெரியவந்தபோது வியந்து போனேன்! 'அர்ப்பணிப்பு உணர்வு' அப்படி இருக்க வேண்டும். ஆனால் இங்கு வியாபாரக் குறிக்கோள் தவிர யாருக்கும் வேறு சிந்தனை இல்லை. ஆனால், மக்களைத் தொடர்ந்து ஏமாற்ற முடியாது. இப்போதே, வருகிற தேசபக்திப் படங்களில் பெரும்பாலானவை தோல்வியடையத்தானே செய்கின்றன?'' என்று கேட்கிறார் லெனின்.

அது வாஸ்தவம்தான் என்கின்றன புள்ளி விவரங்கள். வருடத்தில், வருகிற சுமார் நூறு படங்களில் பத்து வெற்றி அடைவதும் அதில் ஒன்று அல்லது இரண்டு மட்டுமே 'தேசபக்தி'ப் படமாக இருப்பதையும் பார்க்கிறோம்.

முழுமையான தேசபக்திப் படமெல்லாம் ஓடாது என்கிற இவர்களின் கருத்தெல்லாம் பாரதிராஜாவின் 'அந்திமந்தாரை' வந்ததும் எத்தனை தூரம் நிஜம் என்று தெரிந்து விடும். வணிக ரீதியில் எவ்வித சமரசமும் இன்றி எடுக்கப்பட்டிருக்கும் இப்படம், இயக்குநரின் தீவிர தேசிய நோக்கைக் காட்டி இருக்கிறது என்பது ஒருபுறம் இருக்க, இப்படிப்பட்ட தரமான, committed படங்களுக்கு அரசு உதவ முன்வரலாம். (விருது கொடுப்பது தவிர.)

லெனின் சொன்ன மற்றொரு தகவல் நமக்கு வியப்பு அளிப்பதாக இருந்தது.

''தேசிய திரைப்பட வளர்ச்சி நிறுவனத்தை (NFDC) பெரும்பாலும் எல்லோரும் குறை சொல்கிறார்கள், 'அவர்கள் படம் எடுக்க இங்கிருப்பவர்களுக்கு உதவுவதில்லை' என்று. ஆனால் NFDC அங்கிகரிக்கும்படியான தரமுள்ள ஸ்கிரிப்டுகளை இவர்கள் யாரும் அனுப்புவதில்லை என்பதுதான் உண்மை. NFDCக்கு அனுப்புகிற ஸ்கிரிப்ட்கள் பிரசார தொனியில் தான் இருக்கவேண்டும் என்பதில்லை. மசாலாத்தனமில்லாத நல்ல காதல் கதைகளைக் கூட அனுப்பலாம். அவர்களின் ஒரே அளவுகோல் 'தரம்' தான். முப்பத்தொன்பது லட்சம் வரை ஒரு படத்துக்கு தரத் தயாராக இருக்கிறார்கள். 'நிஜமாகவே தரமான, முழுமையான தேசபக்திப் படம் எடுக்க விருப்பம்தான்; கமர்ஷியல் நிர்ப்பந்தங்களால்தான் முடிவதில்லை' என்று சொல்லும் இயக்குநர்கள் ஏன் பயன் படுத்திக்கொள்ளக் கூடாது?'' என்று கேட்கிறார் லெனின்.

கதவுகள் திறந்துதான் இருக்கின்றன; நுழையத்தான் ஆள் இல்லை.

— ஔரங்கசீப்



KANMANI
AGRO
GOLD
FARM

ஸ்ரீ அன்னையே துணை

# KANMANI AGRO GOLD FARM

9,10 TH AVENUE, ASHOK NAGAR, MADRAS - 600 083. TEL: 482 43 79

**[A KANMANI GROUP OF COMPANY]**

CATERING CASH CROP CULTIVATION
LIKE VEGETABLES, FRUITS & FLOWERS

## ACCEPTS FIXED DEPOSITS

*STRICTLY UNDER 45 S. CHAPTER III C OF RBI ACT OF 1934*

| PERIOD | 1 YEAR | 2 YEARS | 3 YEARS |
|---|---|---|---|
| INTEREST PAID QUARTERLY | @ 24% P.A. | 24% P.A. | 24% P.A. |
| INCENTIVE PAID INITIALLY | 3% | 6% | 9% |
| SPL. INCENTIVE FOR DEPOSITORS OF RS. 10,000/- AND ABOVE | - | - | 3% |

*Plus Attractive Gifts for all Depositors.*

Mediamate/KA/MS/96



வானளாவிய நம்பிக்கை

# பாலு ஜுவல்லர்ஸ்

## 15ஆம் ஆண்டு விழா !

## 9.6.96




**நம்பிக்கை ! நாணயம் ! நாகரீகம் !**

பெருகிவரும் வாடிக்கையாளர்கள், திரையுலக நட்சத்திரங்கள்
மற்றும் பிரபல பலதுறை பிரமுகர்கள் சூழ
சிறப்பாகக் கொண்டாடப் பெறும்

**பிக்சட் டெபாசிட்**

ஒரு வருடத்திற்கு **21%** வட்டி

இரண்டு வருடத்திற்கு **24%** வட்டி




பாம்பன் ஆயில் மில்ஸ் பி. லிட்

பாலு ஃபைனான்ஸ்





தங்க நிகர் எண்ணெய்
"பாம்பன்"



அன்புடன் அழைக்கும்



**பாலு ஜுவல்லர்ஸ்**

வைரம் தங்கம் வெள்ளி

73, உஸ்மான் சாலை, தியாகராயநகர், சென்னை - 600 017.
✆ : 4341812, 4348217, 4341741 பேக்ஸ் : 4343377

பாலு அம்பப்பன்
உரிமையாளர்
'பாலு ஜுவல்லர்ஸ்'

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 1996



**முதல் பரிசு ரூ. 1,500**

**இரண்டாவது பரிசு**

**ரூ. 1,000**

**மூன்றாவது பரிசு**

**(இரு கதைகளுக்குத் தலா**

**ரூ. 500 வீதம்)**

**ரூ. 1,000**

**ஆக மொத்தம் ரூ. 3,500**

**பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 150 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்கு போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால் தலை ஒட்டிய, சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 4 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**ஆசிரியர், கல்கி,**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை – 600 097.**

9

மனக் குமைச்சலை மறைக்க வழியறியா மல் தவித்த பால்ச்சாமி ஒரு புத்தகத்தை எடுத் தான். கட்டிலில் ஒன்றுக்கு ரெண்டு தலை யணைகளைப் போட்டு படுத்துக் கொண்டே படித்தான்.

எழுத்துக்கள், வார்த்தைகள் தெரிந்தன. வாக் கியங்கள் ஓடின. மனசுக்குள் எதுவும் ஒட்டவில்லை. 'கண் களுக்கும் மனசுக்குமான இணைப்பு அறுபட்டுவிட்டதா' என்று வினோதமாகச் சிந்தித்தான்.

பிரேமாவிடம் எப்படிச் சொல்ல? எப்படி சம்மதிக்க வைக்க? சம்மதிக்கிற மாதிரி என்ன யுக்தியில் சொல்ல? எந்த வகையான தந்திரங்களைக் கையாள்வது?

கண்கள் காகிதத்தில் வலமும் இடமுமாய்ப் பாய... மனசுக் குள் திசை சிதறிய நினைவுகள். நாலாதிசைகளிலும் நழுவிக் கொண்டோடுகிற நினைவுகள்.

"ஏங்க..."

"ம்?"

"குளிக்கணுமா? வெந்நீ வைக்கட்டா?"

"ம். இன்னிக்கு என்ன கெழமை?"

"புதன்கிழமை... ஏன், குளிக்குறதுக்கு நாள் கெழமை பாக்கணுமா?"

"அதெல்லாம் இல்லே... சரி, வெந்நி வை."

பிரேமா அலுமினியச் சட்டியில் தண்ணீர் ஊற்றுகிற சத்தம். தூக்கி அடுப்பில் வைக்கிற சத்தம். அப்பளம் பொறிக்கிற வாசம்.

மின் விளக்கைத் தட்டி விட்டாள். வீடு பூராவும் வெளிச்சம். அவள் ஒளித் தேவதையைக் கண்ணில் ஒற்றி வணங்கிக் கொண்டாள். இவன் கிழமையைக் கேட்டதாலோ... என்னவோ... காலண்டரைப் பார்த் தான்.

பௌர்ணமி.

"ஏங்க... இன்னைக்குப் பௌர்ணமி போலிருக்கு..."

அது இவன் காதுகளில் விழுந்தது. மனசுக்குள் இறங்கவில்லை. புதன்கிழமை மட்டுமே நின்றது. அம்மா ரிப்போர்ட் செய்த குரல், "வர்ற சனிக்கிழமை நாட்டுலே நடக்குற பாலியல் வன்முறைக் கொடுமைகளைக் கண்டிச்சு மாநில அளவுலே மாதர் சங்க உண்ணா விரதப் போராட்டம்."

'சனிக்கிழமை. அதுக்காக இப்பவே எதுக்குப் போட்டு மனசைக் குழப்பிக்கிடணும்? ம்ம்... வெள்ளிக்கிழமை பாத் துக்கலாம்...'

மனசின் உள் கசடுகளையெல்லாம் இழுத்து வருவதைப் போல கனத்த பெருமூச்சு. புத்தகத்தை மூடி வைத்தான். மெள்ள எழுந்தான். ஒரு மயிலின் நளினமாய் வந்து வந்து மறைகிற பிரேமா மின்னல்.

ஏதேனும் பேச்சு கொடுக்க ஆசைப்படுகிற பிரேமா. முகத்தின் சிரிப்பும் நினைப்பும் ஒளிக் கோலமாக...

அவனது இறுக்கத்தையும் மௌனத்தையும் உடைக்க பயந்து போய்... அவளும் சத்தமில்லாமல் நடமாடினாள்.

பின்பக்கம் வந்தான். அவரைக் கொடியில் நீலமும் வெள்ளையுமாய்ப் பூங்கொத்துக்கள். சின்ன வேப்பங்கன்று. கீழ்வானத்தைப் பார்த்தான். தங்கவெளிச்சமாய்க் கீழ் வானம். உதயமாகிய நிலா வின் சந்தன நிற ஒளிப்பூச்சு. காம்பவுண்டுச் சுவருக்கு மேலாக நிலாவின் இளமுகம். பெரிய தங்கத் தாம்பாளமாய் தகதகப்பு. அறுத்த மாம்பழ நிறத்தகதகப்பு... மெள்ளச் சிணுங்கித் தழுவுகிற மென் காற்று...

நிலாவையே பார்த்தான். மேலேறும் நிலா. வடிவம் சிறிதாகி... வெள்ளிக்கிண்ண மாக தகதகத்து...

அவனது வெற்று முதுகில் ஒரு குளிர் ஸ்பரிசம். பிரேமா வின் கை. அவனுக்குள் சுகப் புல்லரிப்பு. இன்ப ஆச்சர்யம்.

இதே இடத்தில்தான். கட் டியணைத்ததற்காக கதறிய வள். இன்று, அவளே வந்து மெள்ளத் தொடுகிறாள். இன்பகரமான மாற்றம்.

# ஆகாயச்

அவள் பூந்திரேகம் அவனது முதுகில்.

"என்னங்க... நெலாவை ரசிக்கீஙளா?"

"ம்."

"நெலா... தங்கப்பாளம் மாதிரியிருக்குல்லே."

"ஏய்... பிரேமா, என்ன இன்னைக்கு விசேஷம்?"

"ஒண்ணுமில்லியே..."

அவளை இழுத்து தன்னரு கில் நிறுத்தி... இடைவெளி யின்றி இறுகச் சேர்த்துக் கொண்டான். அவளது கன்ன மென்மை, அவனது புஜத்தில் பதிந்தது.

"நெலாவை வர்ணிக்க ஆரம்பிச்சுட்டே?"

"ஏங்க 'இங்கேயும் ஒரு நெலா'ன்னு சொல்றாப்புலே ஒரு பொண்டாட்டி அமை

மேலாண்மை பொன்னுச்சாமி

யலியேன்னு வருத்தப் படுறீகளா?"

சட்டென்று திரும்பி அவள் முகத்தைப் பார்த்தான். புஜத்தில் பதிந்து கிடந்த அவள் முகத்தைப் பார்த்தான். பார்வையில் கனிவும் குழைவும்.

"ஏங்க.... இந்த கருவாய் மூஞ்சியைப் பாத்த வுடனே உங்களுக்கு எப்படிப் பிடிச்சுப் போச்சு? உங்க அம்மா, அப்பா... சொந்தக் காரங்க எல்லாரையும் மீறிக்கிட்டு சம்மதம் சொன்னீக...?"

அவளை மேலும் இழுத்து தன் எதிரில் நிறுத்திக் கொண்ட பால்ச்சாமி



# சிறகுகள்

அவளைப் பரிவுடன் நோக்கி, புன்னகைத்தான். கண்ணுக்குள் கண்ணாகப் பார்த்தான். ஊடுருவும் பார்வை.

"பிரேமா... நெலா நாளைக்கே கொறை நெலாவா யிரும். ஆனா...நீ ... அப்படியா? நாளாக நாளாக நீ கனிவே. மனசாலும் உடம்பாலும் பக்குவமாவே. அழகா மாறுவே. அன்னிக்கும் இந்த நெலா இப்படியேதான் இருக்கும், தெரியுமா?"

"நெசமாவா?"

"அதுமட்டுமில்லே பிரேமா... இன்னொரு விஷயம் தெரியுமா?"

"ம்?"

"ஒரு வினாடி வினாவுலே ஒரு கேள்வி. 'உலகத்துலேயே மிகச் சிறந்த அழகி யார்'னு கேட்டாங்க.? 'கிளியோபாட்ரா', 'எலிசபெத்டெய்லர்'னு ஏகப்பட்ட பதில்கள். அதுக்கெல்லாம் மார்க் கெடைக்கலே. எந்தப் பதிலுக்கு மார்க் தெரியுமா?"

"ம்?"

"காதலிக்குற என் மனைவி."

அப்படியே பூரித்துப் போனாள். அவனைத் தழுவி மார்பில் முத்தமிட்டாள். அன்றைக்கு அவன் பௌர்ணமிக் கடலாகக் கொந்தளித்து அலைமோதி அவனுக்குள் ஒடுங்கினாள். சொர்க்கமாய் நகர்ந்த அந்த இரவை முழுமையாக அனுபவிக்க முடியாமல் அவனுள் 'சனிக்கிழமை' நினைவுகள்.

விடிந்தால் சனிக்கிழமை. வெள்ளிக்கிழமை மாலையில் பால்ச்சாமி வெளியூர்ப் பயணம் புறப்பட்டுக் கொண்டிருந்தான். சின்ன சூட்கேஸில் துணிமணி, சோப்பு, பிரஷ் எல்லாம் வைத்தான். சனிக்கிழமை இரவுதான் திரும்பி வருவான்.

கட்சியின் மாநில மாநாடு... இன்னும் மூன்று மாதத்தில். கட்சியின் கொள்கைகளையும் தியாக வரலாறுகளையும் சொல்ல வேண்டிய கடமையோடும் நிதி வசூலைக் கருதியும் மாநாட்டு மலர் ஒன்று வெளியிடத் திட்டம்.

அந்த மலருக்கு பால்ச்சாமி ரெண்டு பக்கம் விளம்பரம் சேகரித்தாக வேண்டும். கட்சியில் ஏற்றுக்கொண்ட பொறுப்பு.

அது விஷயமாகத்தான் பால்ச்சாமியின் புறப்பாடு.

இன்னும் பிரேமாவிடம் 'உண்ணாவிரத' விஷயத்தைச் சொல்லவில்லை. பயம், நடுக்கம், தயக்கம். அதைச் சொன்ன

பிறகு, அவள் படப்போகிற அவஸ்தைகளைக் கண்கொண்டு பார்க்கச் சகிக்காது. மனசு தாங்காது.

உயிரின் துடிப்பை உயிர் தாங்குமா?

அவனுக்குள் தவிப்பு. மூன்றுநாளாக மாறி மாறி ஏற்பட்ட மன உளைச்சல்கள். 'எப் படிச் சொல்ல... எப்படிச் சொல்ல...' என்று குழம்பித் தவித்த யோசிப்புகள். உள் மனசை வாட்டி யெடுத்த வெக்கை நினைவுகள்... நினைவுப் புழுக்கள்.

ஒன்றும் பிடிபடவில்லை. எந்த முடிவும் தோன்றவுமில்லை. எந்த முடிவுக்கு வந்து சேரவும்... மனசில் தைரியமில்லை; நேசித்து நெகிழ்கிற மனசாக. ஈரக் கனிவான மனசாக, ஒரு கண்ணீர்த் துளியின் உஷ்ணத்தைக் கூடத் தாங்க இயலாமல் உருகி வழிகிற மனசாக மாறிப் போனோமே என்று நினைத்து மருகிய பால்ச்சாமி.

இந்த மாற்றம்... வளர்ச்சியா...? வீழ்ச்சியா? சுயவிமர்சனத்துக்குரியதா... சுய பெருமிதத் துக்குரியதா...? புரியவில்லை.

பேரவைக் கூட்டத்தின் உணர்ச்சிச் சூழலில் வெகுண்ட தீவிரம். சுபாவமான அவசரம். வீராப்பு. நினைத்து விட்டால் பின் வாங்காத இயல்பு. 'என்னால் முடியும்' என்று அடித்துச் சொன்ன தீவிரம். 'தோற்றுவிட்டால் பல தோழர்களின் பரிகாசத்திற்கு ஆளாக வேண்டுமே' என்கிற பதற்றம். நமைச்சல்.

அவன் இடுக்கிப் பிடியில் சிக்கிக் கொண் டான்.

இங்கோ... கூச்ச சுபாவத்தை பிறவிப் பழக்கமாகக் கொண்டவள். அடுப்பங்கரையே உலகம் என்று ஒடுங்கிப் போனதில் சுயநிறைவு காண்கிற பிரேமா. இந்த உலகத்தை ஓர் அணு கூட விஸ்தரிக்கப் பயப்படுகிற பட்டிக்காடு.

'என்ன செய்ய...' என்ற கேள்வியே விசுவ ரூபமாகி அவனைத் தழுவி வளைத்து, நெருக்கி...

மூச்சுத் திணறுகிறான்.

சூட்கேஸை மூடினான். சட்டையை மாட்டினான். முகத்தைக் கழுவித் துடைத்து... லேசாக பவுடர் அப்பிக் கொண்டான்.

"சரி... எப்ப வருவீக?"

"சனிக்கிழமை நைட்லே வந்துருவேன்."

'நாளைக்கா...?"

"ம்."

யோசனைகள் அவனை நிர்ப்பந்திக்க... தயக்கமும் இறுக்கமுமாய் பிரேமா முகத்தைப் பார்த்தான். உதடு வரைக்கும் வந்து வந்து திரும்புகிற வெடிகுண்டு. தூக்கியெறிய உதடு களுக்குத் தயக்கம், நாக்கில் நடுக்க வியர்வை.

"என்னங்க...?"

"ஒண்ணுமில்லே..."

"என்னமோ சொல்லணும்னு நெனைக்கி களே...?"

"ம்..." என்று அடர்த்தியாய்ப் பெருமூச்சு விட்டான். மனசை அரித்துத் தின்னுகிற கவலைகள்.

"பிரேமா..." என்றான். குரலில் கனிவும்,




## அட!

கடந்த சில நாட்களுக்கு முன்னால் எங்கள் ஊரில் இருந்து மேட்டூருக்குத் தனியார் பேருந்து ஒன்றில் காலை நேரத்தில் பயணம் செய்து கொண்டிருந்தேன். அப்போது +2 தேர்வு நடந்து கொண்டிருந்த சமயம். பேருந்தில் மாணவ, மாணவியர் அதிகம் பயணம் செய்து கொண்டி ருந்தனர். நான் பேருந்தில் ஏறும்போது, ''ராக்கம்மா கையத்தட்டு....'' என்ற பாடல் பேருந்தில் ஒலித்துக் கொண்டிருந்தது. பேருந்து இரண்டு கிலோமீட்டர் சென்றி ருக்கும். ஓட்டுனர், ஒரு மாணவரைப் பார்த்து ''எல்லோ ரும் ஏறிட்டாங்களா?'' என்றார். அந்த மாணவரும் தலையை அசைக்க, ஒலித்துக் கொண்டிருந்த பாடல் நிறுத் தப்பட்டது. நான் ஏதோ வேறு கேசட் மாற்றுகிறார் என்று நினைத்தேன். நினைத்தது சரிதான். ஆனால் அது பாடல் கேசட் அல்ல. அன்று மாணவர்கள் எழுதவிருந்த, வேதியியல் பாடத்திற்கான முக்கியக் குறிப்புகள் என்ற முறையில், முக்கியமான சமன்பாடுகள், பார்முலா என்று கேசட் ஒலிக்கத் தொடங்கியது. முதலில் எனக்குப் புரிய வில்லை. பின் எனக்கு அருகே அமர்ந்திருந்த மாணவரிடம் விசாரிக்க, முக்கியக் குறிப்புகளைச் சேகரித்து அதைப் பதிவு செய்து ஒலிபரப்பினால், மாணவர்கள் பயனடைவார்கள் என்ற ஐடியா கொடுத்தது இந்த ஓட்டுனர்தான் என்று கூறிய அந்த மாணவர், 'சற்றுநேரம் பேசாமல் வாருங்கள்; நான் பாடத்தை கவனிக்க வேண்டும்'' என்றும் கூறினார்!

— கே. ராஜாதிருவேங்கடம்.

குழைவும்.

"நாளைக்கு நம்ம ஊர்லே... முக்குரோட்டுலே... ரொம்ப பெண்கள் உண்ணாவிரதம் இருக்கப் போறாக. எப்படியும் அம்பது.. அறுபது பெண்கள் தேறும்."

"எதுக்குங்க...?"

சொன்னான். சிறுமிகள் கற்பழிக்கப்படுகிற கொடுமை. காவல் நிலையங்களில் ஏழை எளிய தாழ்த்தப்பட்ட பெண்களை நிர்வாணமாக்கி கற்பழிக்கிற அத்துமீறல்கள்.

'அடக் கொடுமைக்காரப் பாவிகளா...' 'அக்கிரமக்காரப்பாவிகளா...' 'நாசமாய்ப் போற சனியங்க...' 'அக்கா தங்கச்சிக கூடப் பொறக்காத மிருகங்களா...' என்ற மனக் கொதிப்பின் தெறிப்புகளாக சபித்தல்களோடு 'ம்' கொட்டினாள், பிரேமா.

"இதெல்லாம் கண்டிச்சுத்தான்..... நாளைய உண்ணாவிரம்."

"பொம்பளைகளா...?"

"ஆமா!"

"நடுத் தெருவுலேயா...?"

"ம்."

"நூறு ஜனம் போய் வர்ற எடத்திலேயா?"

"ம்."

"எப்படிங்க முடியும்? பொம்பளைகளுக்குக் கூச்சமாயிருக்காதா? ஆம்பளைக கூடிப் பாக்க... பொம்பளைக நடுத் தெருவுலே உக்காரணும்னா... வெக்கமாயிருக்காதா?"

"எதுக்கு வெக்கப்படணும்? வெக்கக்கேடான கொடுமைகளை முடிவுக்குக் கொண்டு வரணும்னா... பெண்களுக்கு தைரியம் வர வேண்டாமா? துணிச்சல் வர வேண்டாமா? பெண்களுக்கு ஆபத்து வந்தா... பெண்கள்தானே கோபப்படணும்?"

"ஏங்க...? துரோபதைக்கு ஆபத்துன்னா... கிருஷ்ண பகவான் வரல்லியா? சீதையைச் சிறையெடுத்தப்ப... ராமரு வந்து காப்பாத்தலியா?"

பிரேமாவின் வெகுளித்தனமான வெள்ளைக் கேள்வி. அவனது யத்தனிப்பு ஆயுதங்களையெல்லாம் 'பொல, பொல'வென்று உதிர்த்துவிட்ட கேள்வி. அவனுள் குப்பென்று சூழ்ந்த சூன்யம். அவனையே அச்சுறுத்தித் தடுமாற வைக்கிற அவனது உள்ப் பலவீனம்.

ரொம்பத் தன்னாடிப் போனான். சமாளித்துக் கொண்டு... சூர்க்கமாய் எழுந்தான், உள்ளுக்குள்.

"அதெல்லாம்... புராணக் கதைகள்லே. நடப்புலே நடக்காது. இங்க... ஒன்னை அடிச்சா... ஒனக்குத்தான் வலி; நீதான் கத்தியாகணும்."

"மேடைப் பேச்சாளரு... நீங்க. உங்களைப் பேசிச் செயிக்க முடியுமா?" என்று 'கெத்



"லஞ்சம் வாங்காமல் இந்த குமாஸ்தா எதிலும் கையெழுத்துப் போடமாட்டார்."

"அதுக்காக அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டரில் கையெழுத்துப் போடக்கூடவா லஞ்சம் கேட்கறது?"

- லலிதா செல்லப்பா.

---

தாக'ப் பின் வாங்குகிற பிரேமா.

"அதுமட்டுமில்லே பிரேமா..."

"ம். சொல்லுங்க."

"அன்னிக்கு நடந்த பேரவைக் கூட்டத்துலே... ஒன்னை நம்பி ஒரு சவால் வுட்டுட்டேன்...."

"சவாலா...?"

தொண்டைக்குள் சத்தமாக ஹீனமடைகிற குரல். முகத்தில் பயக்களை. வெடிகுண்டின் வெடிப்பை மர்மமாய் யூகித்துவிட்ட ஒலியுணர்ச்சி. வெட்டுப்பட்ட பல்லி வாலாகப் படபடத்துத் துடிக்கிற இமை ரோமங்கள்.

"நீயும் உண்ணா விரதத்துலே பங்கெடுக்கணும்."

"நானுமா...?"

கண்களில் நீர் கோக்கிறது. உதடுகளின் மெல்லிய துடிப்பில் மனசின் அதிர்வுகள். உலர்ந்து வெளுக்கிற முகத்தில் படர்கிற பீதி உணர்ச்சி. வெலவெலப்பு.

இளகிக் கரைகிற மனசை இறுக்கிப் பிடித்துக் கொண்டான், பால்ச்சாமி. தன்னைத் தானே திடப்படுத்திக் கொண்டான்.

"ஆமா. நெறைஞ்ச சபையிலே துணிஞ்ச மனசோட சவால்வுட்டுட்டு வந்தேன். சவால்லே தோத்துட்டா... எனக்கு மானக்கேடு. தலை நிமிர முடியாத கேவலம். பத்துப் பேரு கைகொட்டிச் சிரிக்கிற அவமானம்."

உள்ளுக்குள் உயிர் நரம்பு வெட்டுப்பட்டதைப் போல, அதிர்ந்து, உறைந்து போன பிரேமா. அழக் கூடப் பிரக்ஞையற்று ஸ்தம்பித்துப் போன பிரேமா.

"பிரேமா... சொந்த பந்தங்களையெல்லாம் ஒதறிட்டு, நீயும் நானும் ஒரு குடும்பமா வாழறோம். என்ன பலத்துலே? ஒனக்காக நானும், எனக்காக நீயும் விட்டுக் குடுத்து அட்ஜஸ்ட் பண்ணிப் போற மன பலத்துலேதான். பரஸ்பரம் ஒருத்தர் மானத்தை ஒருத்தரு காப்பாத்துவோம்ங்கிற நம்பிக்கையிலேதான். அந்த நம்பிக்கைதான்... நாம வாழுற- வாழப்போற-

தாம்பத்யத்துக்கே அடிப்படை. அஸ்திவாரம். ஆணிவேர்.''

''......................''

''அந்த நம்பிக்கையிலேயிருந்துதான் அன்பு வளருது. பாசம் வளருது. ஒருத்தரு கால்லே முள்ளு குத்துனா—இன்னொருத்தருக்கு நெஞ்சு வலிக்குது. அந்த நம்பிக்கை.. ஊனமாயிட்டா... நம்ம ஒறவே பொய்யாயிரும். வேஷமாயிரும். அழுகையும் கண்ணீருமா.. ஏமாத்தும் வஞ்சகமுமா.. துவேஷமும் துன்பமுமா... நம்ம வாழ்க்கையே நரகமாயிரும்...''

''....................''

''அந்த நம்பிக்கை ஒங்கிட்டேயிருக்கு. அந்த நம்பிக்கையிலேதான், சவால்விட்டுட்டு வந்துட்டேன். என்னோட மானமரியாதையும், நம்மோட எதிர்கால வாழ்க்கையும் ஒங்கையிலேதான் இருக்கு. உண்ணாவிரதத்துலே போய் நீ உக்கார்றதுலேதான் நம்ம உறவோட உயிரே இருக்கு... பாத்துக்க...''

எல்லாம் பேசி முடித்த உணர்வில்... சூட்கேஸை கையில் எடுத்தான், பால்ச்சாமி. செருப்புக்குள் பாதங்களை நுழைத்தான்.

''அப்பச்சரி... பிரேமா... நா போய்ட்டு வாறேன். நாளைக்கு நைட்லே வந்துருவேன்...''

புறப்பட்டுவிட்டான். வாசலைக் கடந்து... வேப்பமரத்து நிழலைக் கடந்து வீதிக்குள் இறங்கினான். மனப்பாரம் இறங்கியது போலிருந்தது. ஆனால்... மனசுக்குள் புதிய பாரம் ஏறிக் கொண்டதை உணர்ந்தான்.

திரும்பி.... பிரேமாவைப் பார்க்க வேண்டும் போல மனசுக்குள் ஒரு குறுகுறுப்பு. கட்டுப்படுத்திக் கொண்டான். திரும்பினால்... தெரிகிற முகத்தின் கலக்கத்தில்... கண்ணீர்த் துளியின் மின்னலில்... தன் மனசு கரைந்தாலும் கரைந்துவிடுமோ... என்ற பயத்தில், திரும்பாமலேயே நேராக நடந்தான். நடையை எட்டிப் போட்டான்.

ஏனோ.... உள்ளுக்குள் குறுகுறுக்கிற குற்ற உணர்வு. முள்முள்ளாகக் குத்திக் கிழிக்கிற சுய வருத்தம். பூச் செண்டை கத்தியலால் ஓங்கியடித்து விட்ட மாதிரியோர் உறுத்தல்.

எச்சில் வடிய சிரித்துக் கொண்டே தவழ்ந்து வந்த மழலையை எட்டி உதைத்து விட்ட மாதிரியான மன உளைச்சல்.

என்ன செய்வாள் பிரேமா? அழுவாளா? அழுகையை அடக்கமாட்டாமல் திணறுவாளா? என்ன நினைப்பாள்? புருஷன் என்ற அதிகாரத்தில், ஆணாதிக்க மமதையில்- அரட்டி விட்டுப் போவதாகக் குமுறுவாளா? குமைச்சலை யாரிடம் கொட்டியழுவாள்? அழக் கூடத் திராணியற்று முட்டிமோதுகிற உணர்வுகளைக் கொட்டியழவும் ஆளற்று... தனிமைத் தீயில் வெந்து தவிப்பாளோ?

மனசுக்குள் பலதையும் நினைத்து மருகுவாளோ...

பால்ச்சாமியின் பால் மனசு, உள்ளுக்குள்ளேயே மருகித் தவித்தது. தனக்கேயுரிய தீவிர முனைப்புகளும், அவசரப்படபடப்பும்...

முதன் முதலாக.. தன்னைத்தானே விலகி நின்று பார்த்தான். தனது பிறவிச் சுபாவத்தை மனசால் தொட்டுணர்ந்தான்.

இது... என் பலவீனமா...?

இந்தச் சுய விசாரணையின் நீட்சி, ஓரிடத்தில் முட்டி மோதி, அறுபட்டு நின்று போயிற்று.

நினைக்கக் கூடாததை நினைத்து... ஏடாகூடமாக... செய்யக் கூடாததை செய்து விட்டால்...? (விஷ) மருந்தை கிருந்தை குடித்துத் தொலைத்து விட்டால்...?

ஐயய்யோ...!

தாளக்கூடிய இழப்பா? ஏழு தலைமுறைக்கும் அழியாத கேவலமாகிப் போகுமே... ஆடி அழித்த சிறுபிள்ளை விளையாட்டுப் போல, வாழ்க்கையே நாசமாகிப் போகுமே...

ஒதுங்கிப் போன சுற்றத்தார் எல்லாம்... கைகொட்டிச் சிரிப்பார்களே....

சின்ன அவமானத்தைச் சந்திக்கப் பயந்து... பெரிய கேவலப் படுகுழியில் விழுந்து, வாழ்வே நொறுங்கிப் போன அவமானமாகி விடுமோ...

அவனுக்குள் கண்ட கண்ட காட்சிகள்.

இப்படிச் சிந்திக்கவே முடியாத பால்ச்சாமி... சட்டென்று தன் மனத்தை வேறு திசையில் வலுக்கட்டாயமாகச் செலுத்தினான். ஆனாலும்... மனசு, 'திக்திக்'கென்று அடித்துக் கொண்டேயிருந்தது. ஆனால்—

பின்வாங்க முடியாமல், அவனது பிறவிச் சுபாவம் தடுத்தது.

(தொடரும்)

---

- *நர்சரியில் பூக்கள்.. – மழலைகள்!*

- *பொய்யான மெய்யின் மெய்யான உறக்கம்... – மரணம்!*

- திருவான்மியூர் பாலு





# முதல்வர் மனம் புண்ணானதேன்?

**"என் உதடுகள் புன்னகை புரிவது போல் நடிக்கின்றன; ஆனால் உள்ளமோ புண்ணாகிக் கிடக்கிறது" என்று கருணாநிதி சொன்னது உடன்பிறப்புகளையும் நடுநிலையான அதிகாரிகளையும் சிந்திக்க வைத்திருக்கிறது.**

"கடந்த ஐந்து ஆண்டுகளாக அரசு நிர்வாகம் என்பது தனிப்பட்ட குடும்பத்துக்குச் சேவை செய்யும் அமைப்பாக மாறி விட்ட நிலையில், அரசு இயந்திரத்தைச் சரிசெய்யும் சவால் சாதாரணமானதல்ல. கலைஞரே சொன்னது போல், பாதை முழுவதும் முள்ளாகவும் முட்புதராகவும் இருக்கின்ற நிலையில் நாட்டு மக்கள் விரும்பும் நல்லாட்சியைத் தருவதற்கு நாங்கள் கடுமையாகவும், புத்திசாலித்தனத்துடனும் உழைக்க வேண்டியுள்ளது. அதைத்தான் கலைஞர் சொல்லியிருக்கிறார்" என்று சொன்னார் கோவை மாவட்ட, தி.மு.க. எம்.எல்.ஏ. ஒருவர்.

"1980 வரை கூட, தமிழகத்தின் ஐ.ஏ.எஸ். மற்றும் ஐ.பி.எஸ். அதிகாரிகளுக்கு வடக்கே நல்ல மதிப்பு இருந்தது. ஆனால் இப்போது சீந்துவாரில்லை..." - இதைச் சொன்ன ஓர் ஐ.ஏ.எஸ். அதிகாரி, தி.மு.க. ஆட்சிக்கு வந்த பிறகு சில முக்கிய இடங்களில் நியமிக்க, பணியில் நல்ல பெயரெடுத்த போலீஸ் அதிகாரிகளைக் கண்டுபிடிப்பதே மிகுந்த சிரமமாகி விட்டது என்றும் கூறினார்.

"முக்கால்வாசி போலீஸ் துறை கெட்டுப் போய் விட்டது என்று சட்டசபையில் முதல்வர் சொன்னது சரிதான். ஆட்சியின் ஊழல் காரணமாக, காவல் துறையிலும் மேலிருந்து கீழ்வரை ஊழல் பரவ அனுமதிக்கப்பட்டது. அதனால் பெரும்பாலான போலீஸாருக்கு அ.தி.மு.க. விசுவாசம் ரத்தத்துடன் கலந்து விட்டது. இது பெரிய பிரச்னைதான். இருப்பினும், முதல்வர் இதை வெளிப்படையாகச் சொல்லாமல், அமைதியாகவே இந்தப் பிரச்னையைச் சமாளிக்க முயற்சிகள் எடுத்திருக்கலாம்" என்று அபிப்ராயப்பட்டார், அந்த ஐ.ஏ.எஸ். அதிகாரி.

தி.மு.க. ஆட்சிக்கு வந்த பிறகு நடந்த மூன்று துப்பாக்கிச் சூடு சம்பவங்கள், ஆட்சிக்குக் கெட்ட பெயர் வாங்கித்தர காவல் துறையினர் முயற்சி செய்கிறார்கள் என்ற பேச்சைக் கூட தி.மு.க. வட்டாரத்தில் கிளப்பி விட்டிருக்கிறது. ஆனால் திண்டுக்கல் துப்பாக்கிச் சூடு அந்த ரகத்தது அல்ல என்று முதல்வரே சட்டசபையில் சொல்லியிருக்கிறார்.

மீனாட்சி கோயில் குண்டு வெடிப்பில் உள்ளூர் அ.தி.மு.க. காரர்கள் சம்பந்தப்பட்டிருப்பதாகவும், அதைக் கண்டறிய முயற்சி செய்யாமல் மதுரை போலீஸ் கமிஷனர் (இப்போது மாற்றப்பட்டிருக்கிறார்) சம்பவம் நடந்த இரண்டு மணி நேரத்தில் இந்து முன்னணி ராஜகோபாலன் கொலையில் சம்பந்தப்பட்டவரை கைது செய்தது பிரச்னையை திசை திருப்பும் போக்கு என்றும் கோட்டை உள்துறை வட்டாரம் நினைக்கிறது.

முழு மெஜாரிட்டியுடன் ஆட்சிக்கு வந்தாலும், மத்தியில் நிலவும் நிலையில்லாத் தன்மை காரணமாக தங்களது பெயரும் ரிப்பேர் ஆகிவிடுமோ என்ற கவலை முதல்வருக்கு இருக்கலாம் என்று குறிப்பிட்டார் மற்றொரு அதிகாரி. உதாரணமாக இன்னும் ஆறு மாதம் அல்லது ஒரு வருடத்தில் ஐக்கிய முன்னணி அரசைக் கவிழ்த்து காங்கிரஸ் 'நிலையான ஆட்சி' என்ற மகா ஆயுதத்தை வைத்து தமிழகத்திலும் அனைத்திந்திய அளவிலும் பாராளுமன்றத் தேர்தலில் வெற்றி பெற்றால் தி.மு.க. அரசுக்குப் பாதகமாகப் போய்விடும்" என்றார் அவர்.

இவையெல்லாம் ஒருபுறமிருக்க, கோபாலபுரத்தை விட்டுத் தனி வீட்டுக்கு முதல்வர் குடிபோவதென்று முடிவு செய்ததானது வெறும் வாயர்களுக்கு நல்ல அவலாகப் போய் விட்டது. ஜெ ஆட்சி போன பின் ஏற்பட்ட செய்தித் தொய்வைச் சமாளிக்க பத்திரிகைகள் வேறு தங்கள் பங்குக்குக் கதை கட்டிக் கொண்டிருக்கின்றன.

இந்தச் சூழ்நிலையில் மனம் புண்ணானதை வெளிப்படையாகக் காட்டிக் கொள்வதனால் கருணாநிதிக்கு அனுதாபம் கிடைப்பது கூடக் கஷ்டம்.

**- கௌசி**

# நடராஜ் எஸ்டேட்ஸ்



வழங்கும், ஈடு இணையற்ற லாபகர திட்டம்

(சென்னை நகருக்கு மட்டும்)



## வாரம் தோறும் காய்கறிகள்

**உங்கள் இல்லம் தேடி வருகிறது**










**காய்கறி விபரம்**

தக்காளி, வெண்டைக்காய், கத்தரிக்காய், வாழைக்காய், புடலங்காய், அவரைக்காய், பாகற்காய், பீர்க்கங்காய், கண்டைக்காய், சுரைக்காய், பூசணிக்காய், பரங்கிக்காய், கொத்தவரங்காய், முருங்கைக்காய், முள்ளங்கி, இஞ்சி, கொத்துமல்லி, கறிவேப்பிலை, மற்றும் கீரை வகைகளும் மாற்றி மாற்றி சப்ளை செய்யப்படும். அத்துடன் கேரட், பீட்ருட், கோஸ், உருளைக்கிழங்கு, வெங்காயம் போன்றவைகளும் சப்ளை செய்யப்படும்.

- வாரம் ஒருமுறை சப்ளை வேண்டுவோர் ரூ.5000/= செலுத்தி 3 வருடங்களுக்கு மெம்பர் ஆக வேண்டும்.
- வாரம் இருமுறை சப்ளை வேண்டுவோர் ரூ.10,000/-செலுத்தி 3 வருடங்களுக்கு மெம்பர் ஆக வேண்டும்.
- 3 வருடங்களுக்குப் பிறகு மீண்டும் ரினிவல் செய்து கொள்ளலாம். அல்லது திரும்ப பெற்றுக் கொள்ளலாம்.
- உங்கள் மெம்பர்ஷிப் கட்டணத்திற்கு 12% வட்டியும் உண்டு.
- சப்ளை செய்யப்படும் காய்கறிகளுக்காக நீங்கள் தனியே பணம் எதுவும் கொடுக்க வேண்டியதில்லை.
- ஒவ்வொரு முறையும் சப்ளை செய்யப்படும் காய்கறிகளின் மதிப்பு ரூ.50/- (சராசரி).
- இலவசம் - காய்கறி நறுக்கும் S.S.கட்டர் மற்றும் நடராஜ் பதிப்பகத்தின் வெளியீடு ஒன்று.

## NATARAJ ESTATES

"Shanthi Complex", 3rd Floor, 26. Ranganathan Street, T. Nagar, Madras - 600 017.

*Branches : Tiruvarur, Thanjavur, Kancheepuram, Pudukottai, Bangalore.*

**Phone : 4342098, 4840150**



NATARAJ GROUP OF COMPANIES

Nataraj Finance & Investments

Nataraj Chits (Tamilnadu) Pvt. Ltd.,

Nataraj Exports overseas, Nataraj Publications,

Nataraj Oil Mills, T.K. Geetha Agro Products.

**24% P.A.**




1996 ஜூன் 9
தாது வைகாசி 27
மலர் : 54
இதழ் : 45

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## அவியல் ஆட்சி ருசிக்குமா?

ஆட்சி அமைக்கச் சொல்லி குடியரசுத் தலைவர் அழைத்தபோது, பி.ஜே.பி. அந்த வாய்ப்பை ஏற்க மறுத்திருக்க வேணடும். போதுமான பெரும்பான்மை இல்லை என்று ஒப்புக் கொண்டிருக்க வேண்டும்.

மாறாக, குடியரசுத் தலைவர் அழைக்கும் முன்னரே, ஆட்சி அமைக்கும் உரிமை கோரி, அவரிடம் சென்றது பி.ஜே.பி!

ஆட்சி அமைத்த இரு வார காலத்துக்குள் இதர கட்சிகளின் ஆதரவைத் திரட்டி விடலாம் என்று தப்புக் கணக்கு போட்டது. அவ்வாறு ஆதரவு திரட்டுவதற்கு ஏற்ற வகையில் தனது தீவிர கொள்கைகளை விட்டுக் கொடுக்கவும் அது தயாராக இல்லை!

விளைவு...? ஆட்சியை மட்டுமின்றி, மக்களின் நல்லெண்ணத்தையும் கணிசமாக இழந்திருக்கிறது அக்கட்சி.

மிக இக்கட்டான சூழ்நிலையிலும் குதிரை வர்த்தகத்தில் இறங்காமல் கண்ணியம் காத்தது ஒன்றே பி.ஜே.பிக்குப் பெருமை சேர்க்கும் விஷயம். இதை எதிர்க்கட்சி உறுப்பினரான முரசொலி மாறனே சுட்டிக்காட்டியிருக்கிறார் என்பது கூடுதல் வலு சேர்க்கிறது.

பி.ஜே.பியை ஆதரிப்பதில்லை என்று முடிவெடுத்துவிட்ட பிறகு, ஐக்கிய முன்னணி தனது




நிலையை இதற்குள் பலப்படுத்திக் கொண்டிருக்கலாம். அடுத்து ஆட்சி அமைக்க அழைக்கப்படுவோம் என்று எதிர்பார்த்து, கூட்டணி கட்சிகள் யாவும் ஏற்கக்கூடிய பொதுத் திட்டம் ஒன்றை இதற்குள் வகுத்திருக்கலாம். ஆனால், தேடிப் பிடித்து தேவே கௌடாவைத் தலைவராக நியமித்ததோடு சரி. அக்கட்சி வேறு உருப்படியான காரியம் எதையும் செய்ய வில்லை.

கர்நாடகாவில் தேவே கௌடாவின் இடத்தை இட்டு நிரப்ப நாளெல்லாம் வாதாடி கடைசி யில் ஜே. எச். பட்டேல் நியமிக்கப்பட்டிருக்கிறார். குடுமிப்பிடி சண்டைகளின்றி அங்கு ஆட்சி தொடருமா? முரண்படும் ஹெக்டேவை எப்படி வழிக்குக் கொண்டு வருவது? போன்ற கேள்வி கள் இயல்பாக எழுகின்றன.

நாட்டு நலனை மட்டுமின்றி, தங்கள் சொந்த நலனையும் உத்தேசித்து, ஐக்கிய முன்னணித் தலைவர்கள் உடனடியாகச் சில காரியங்களைச் செய்ய வேண்டும் :

கடந்த காங்கிரஸ் ஆட்சியின் பொருளாதாரக் கொள்கைகளை, மாற்றமின்றி ஏற்கிறோம் என அறிவிக்க வேண்டும்.

உலக அரங்கிலே அங்கீகாரம் பெற்றுவிட்ட புதிய பொருளாதாரக் கொள்கையின் இரண்டா வது கட்டத்தைச் செயல்படுத்த வேண்டிய சமயம் இது. அதை எப்பாடுபட்டும் செய்து காட்டு வோம் என்று உறுதி அளிப்பதுடன், கட்சிக் கண்ணோட்டத்தைக் கடந்து உயர் பதவிகளில் ஆட்களை அமர்த்த வேண்டும்.

காங்கிரஸ் அமைச்சரவையில் நிதியமைச்சராக இருந்த மன்மோகன் சிங், வர்த்தக அமைச் சராக இருந்த ப. சிதம்பரம் போன்றோரையே அப்பொறுப்புகளை மீண்டும் ஏற்கச் செய்யலாம்.

இதற்குப் பரந்த மனமும் கட்சிக்குள் ஏற்படக்கூடிய புகைச்சல்களைச் சமாளிக்கவல்ல



உறுதியான தலைமையும் அவசியம்.

கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்ட பொருளாதார நிபுணரான மன்மோகன் சிங்குக்கும் நேசக் கட்சியான த.மா.காவைச் சேர்ந்த ப. சிதம்பரத்துக்கும் அமைச்சரவையில் பொறுப்பு ஏற்பது பிரச்னையாக இராது.

இன்னும் ஒரு படி மேலே போய் ஷரத் பவாரைக் கூட ஐக்கிய முன்னணி அமைச்சரவையில் இடம்பெறச் செய்யலாம். பாதுகாப்பு அல்லது உள்நாட்டு விவகாரங்களுக்கு அவரைப் பொறுப்பாக்குவதன் மூலம் இந்த ஆட்சியில் காங்கிரஸின் பங்கேற்பும் இருக்கும்.

ஒருகால் அமைச்சர் பொறுப்பை ஏற்க காங்கிரஸ் தரப்பினர் மறுத்தாலும் ஒரு வலுவான கூட்டணி அரசினை அமைக்க ஐக்கிய முன்னணி தயாராயிருக்கிறது என்பது உறுதியாகும். அதில் காங்கிரஸுக்கும் இடமளிக்கத் தயாராயிருந்தால், ஐக்கிய முன்னணிக்குத் தனது ஆதரவைத் தொடர்ந்து அளிக்க வேண்டிய ஒரு நிலைக்குக் காங்கிரஸ் தள்ளப்படும்.

பலதரப்புக் கட்சிகளையும் அரவணைத்துப் போகத் தயாராயிருக்கும் பரந்த மனப்பான்மை காரணமாக ஐக்கிய முன்னணி, நாட்டு மக்களின் மதிப்பிலும் உயரும்.

காங்கிரஸின் நீடித்த ஆதரவைத் தக்கவைத்துக் கொள்ள, ஐக்கிய முன்னணி சில ராஜதந்திரங்களையும் கையாளலாம். நரசிம்மராவ் முதலான அக்கட்சியின் உயர் தலைவர்கள் பேரில் குற்றச்சாட்டுகள் பல இருக்கின்றன. எம்.பி.க்களை விலைக்கு வாங்குவது தொடர்பான வழக்கில் புதிய குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்பட வேண்டும் என்று உச்சநீதிமன்றமே கூறியுள்ளது. இந்த வழக்குகள், குற்றச்சாட்டுகள் முதலானவை காங்கிரஸுக்கு எவ்வளவுக்கு எவ்வளவு பாதகமாக இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு ஐக்கிய முன்னணிக்கு லாபமாக முடியும் - தேவேகௌடா காய்களை கவனமாக நகர்த்தினால்!

# ஜோடி காதல்கள்+1!

கமலா அக்கா பில்லியனில் தன் பாய் ஃபிரண்டை உட்கார வைத்துக் கொண்டு ஸ்கூட்டரில் போவதைப் பார்த்ததும் அமலாவுக்கு 'திக்'கென்று இருந்தது. 'ஐயோ! இது தப்பாச்சே! கமலாவுக்கு இந்த குண்டு தைரியம் எப்படி வந்தது' என்று திகைத்தாள். 'இவளுக்கு ஸ்கூட்டர் வாங்கிக் கொடுத்ததே தப்பு. அப்பவே சொன்னேன். எனக்குப் பொறாமை என்று முடிவு கட்டினார்கள். இப்போ இந்த அசிங்கத்தைப் பார்த்து என்ன முடிவுக்கு வருவார்கள்?'

அமலாவுக்கு வயது பன்னிரண்டு. அக்காவின் புத்தம் புதிய ஸ்கூட்டரைப் பார்த்ததும் அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது. சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் தவித்து கடைசியில், "ஆமா, டூ வீலர் இருந்தாத்தான் காலேஜுக்குப் போக முடியுமாக்கும்" என்று கேட்டே விட்டாள். கமலா, டூ வீலர் எப்படியெல்லாம் உதவுகிறது; எவ்வளவு சிக்கனமானது, வசதியானது என்று விளக்கிய போது அமலாவின் கோபம் அதிகரித்தது. 'சாப்பாடு வேண்டாம்' என்று முகத்தைத் தூக்கிக் கொண்டு போய் படுத்த போது அம்மாவுக்குப் புரிந்து விட்டது. "இந்தா, பொறாமைப்படாதே! உனக்கும் லைசென்ஸ் வாங்கற வயசு வந்துட்டா ஓட்டிப் போ. அதுக்குள்ள கமலா கல்யாணமாகி புக்ககம் போயிடுவா" என்றாள்.

ஆனால் இப்போது? 'பாய் ஃபிரெண்டை பின்னால் அமர்த்திக் கொண்டு கமலா ஊர் சுற்றுவதைப் பார்த்தால் என்ன சொல்வாள், அம்மா?'

வீடு திரும்பியதும், முதல் காரியமாக அம்மாவிடம் மூட்டை அவிழ்த்தாள். ''நான் ஏதோ பொறாமைப் படறதா சொல்லி அன்னிக்கு அடக்கினியே, இப்ப என்ன ஆச்சு பாரு" என்றாள்.

"என்னாச்சு? என்னாச்சு?'' என்றாள் அம்மா பதற்றமாக.

"அந்தச் சொல்லவே எனக்குப் பிடிக்கலே" என்று முகத்தைக் கசப்பாக்கிக் கொண்டாள் அமலா.

அம்மா பெருமூச்சு விட்டாள். 'நல்ல காலம், ஆக்ஸிடெண்ட் ஏதுமில்லை. இது வேறு ஏதோ விஷயம்.'

''சொல்லப் பிடிக்கலைன்னா எதுக்கு முழ நீளத்துக்கு முன்னுரை வாசிக்கிறே?'' என்றாள்.

சுருக்கென்றது. 'ஒருவேளை எனக்கு இப்போதும் பொறாமைதானோ? அக்கா மாதிரி ஒரு பாய் ஃபிரெண்டுடன் நானும் ஊர் சுற்ற முடியலையே என்ற ஏக்கமோ?' அந்த எண்ணத்தைக் கொன்றாள். அக்காவைப் பற்றிய கவலையில்தான் பேசுவதாக சமாதானம் பண்ணிக் கொண்டாள்.

"அங்க உன் மூத்த பொண்ணு உருப்படாம போயிண்டிருக்கா. இங்க இளையவளுக்கு தர்மோபதேசம் பண்ணு" என்றாள் எரிச்சலுடன்.

அம்மாவுக்குக் கோபம் வந்தது. கவலையும் மிகுந்தது. அமலா கன்னத்தில் ஒரு 'பளார்' விழுந்தது. "என்னடி செய்தா, என் பொண்ணு? சொல்லித் தொலையேன்!"

கண்களில் கண்ணீர் பொங்கியது. அதை ஆவியாக்கும் அளவில் கோபக் கனல் வீசியது. கன்னத்தை உள்ளங்கையால் ஒற்றிக் கொண்டு, "பாய் ஃபிரெண்டை பில்லியனில் உட்கார வைச்சுண்டு ஊர் சுத்தறா; போதுமா?" என்று கேட்டாள்; ஆத்திரமாக.

"மூட்டி விட்டுட்டியா!" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தாள் கமலா. "சகுனி, கூனி எல்லாம் உன்கிட்ட பிச்சை வாங்கணும். ஏண்டி, பாய் ஃபிரெண்டு என்கிறது என்ன கெட்ட வார்த்தையா? என்ன தப்பு பண்ணிட்டேன்? இன்னிக்கு ஏதோ அவசரம் என்று ரமேஷ் லிஃப்ட் கேட்டான். வீட்டிலே இறக்கி விட்டு வந்தேன்..."

"அப்படி என்ன அவசரமாம்? விசாரிச்சியா?" என்றாள் அம்மா கொஞ்சம் சந்தேகமாக.

"அவன் அப்பாவுக்கு உடம்பு சரியில்லைன்னு ஃபோன் வந்ததாம். என்னமோ ஏதோன்னு தவிச்சான். மனிதாபிமானத்துடன் நடந்துக்கிறது தப்பா?"

"நிஜமாகவே உடம்பு சரியில்லேன்னா மனிதாபிமானம்தான். ஆனா பஸ்ஸிலே இடிக்கிறதை விட ஸ்கூட்டரில் உரசிட்டுப்போறது சுகம் என்கிறதுக்காக எமர்ஜென்ஸியை கற்பனை பண்ணியிருந்தா அது மனிதாபிமானம் இல்லே, அதுக்கு வேற பேரு."

"இப்ப என்னங்கறே? அவன் அப்பாவுக்கு



உடம்பு சரியில்லேன்னு டாக்டர் சர்ட்டிஃபிகேட் வாங்கிட்டு வரச் சொல்றியா?"

அமலாவுக்கு பதில் கூறத் தெரியவில்லை. "எக்கேடும் கெட்டுப் போ" என்று பாத்ரூமுக்குள் போய் கதவை அறைந்து சாத்தினாள். 'டமால்!'

"தீபாவளிக்கு ஒத்தை வெடியே வாங்க வேண்டாம். இவளும் பாத்ரூம் கதவுமே போதும்" என்றாள் கமலா.

"அவ சொல்றதிலேயும் ஒரு பாயிண்ட் இருக்கு; ஜாக்கிரதையா இரு" என்று அம்மா எச்சரிப்பதும் அக்கா 'தம்தம்' என்று நடந்து படுக்கை அறைக்குள் நுழைவதும் மெலிதான ஒற்றைக் கல் சுவரை ஊடுருவி குளியலறையில் இருந்த அமலாவின் காதில் விழுந்து, மனம் கொஞ்சம் ஆறுதல் அடைந்தது.

அன்றிரவு பார்வதம் ராகவனிடம் சொன்னாள் : "கமலாவுக்கு ஸ்கூட்டர் வாங்கிக் கொடுத்ததே தப்போன்னு தோணுது."

**கி. ராஜேந்திரன்**

"ஏன்? ஹெல்மெட் போட்டுக்க மாட்டேன்றாளா?"

"தலைக்கு ஹெல்மெட் போட்டுக்கறா சரி. இளம் வயசு; மனசுக்கு என்ன கவசம் இருக்கு?"

ராகவன் பெரிதாகக் கொட்டாவி விட்டபடி டேபிள் லாம்ப் அணைத்து புத்தகத்தைப் 'பட்'டென்று மூடிவைத்து தலையணை தட்டினான்.

அவனுடைய அசிரத்தையைப் பொருட்படுத்தாமல் தன் கடமை என்ற நோக்கில் பார்வதம் நடந்த கதையைச் சொல்லி முடித்தாள்

இருட்டிலே ராகவன் குரல் தூக்கத்துடன் கலந்து மழலை பேசியது : "இந்தக் காலத்துப் பசங்க தேவலாம். காதல் இவங்ககிட்ட கைகட்டி நிக்குது. பொய்யோ மெய்யோ என்னத்தையோ சொல்லி, தைரியமா பேசி, எப்படியோ காரியத்தை சாதிச்சுடறாங்க. நம்மை மாதிரி பயந்து

● ஆஸ்திரேலியா நாட்டின் கிரிப்பித் பல் கலைக் கழகம், நர்ஸ் பணிக்கான பயிற்சி பெற்று வரும் பெண்களுக்கு அழும் பயிற்சி அளிக்கிறது. இதற்காக சோகமான நாவல்களை பாடமாக்கியுள்ளது. நோயாளிகளிடம் இரக்கம் காட்டுவதை நர்ஸ்கள் பெற இது உதவும் என் பது கருத்து!

ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்
தகவல் : எஸ். ஆலன்

பயந்து சாகலே."

"போதுமே அசடு வழியறது" என்று சொன் னாளே தவிர, பார்வதம் அந்தப் பழைய நாட் களின் நினைவுகளில் - ராகவனின் குறட்டை ஒலி பின்னணியில் - ஆழ்ந்து போனாள்.

அவள் ஏறும் அதே பஸ்ஸில் அவனும் காத்திருந்து ஏறுவான். அவன் வீடு வேறு எந்த திக்கிலோ இருந்தது. ஆனாலும் இந்த ரூட்டில் வருவான். அவள் உட்காருகிற ஸீட்டுக்கு எதிர் ஸீட்டில் அமர்ந்து, அவளையே பார்த்துக் கொண்டிருப்பான். அந்த நாட்களில் இருக்கை கள் அமைக்கப்பட்டிருந்தவிதம் இதற்கு அனு சரணையாக இருக்கும். மேலும் கல்லூரி முடிந்து வீடு திரும்பும் போது ஆபீஸ் கும்பல் இராது. எதிரும் புதிருமாக உட்கார இடம் கிடைக்கும். அவன் தன்னையே உற்று நோக்கு கிறான் என்பது அவளுக்குத் தெரியும். ஜன்னல் வழியே ஆகாயத்தைப் பார்ப்பது போல இருப் பான். அப்புறம் வேறு திசையில் கவனம் ஈர்க் கப்பட்டது போல் திரும்புகிற பாவனையில் அவள் திராட்சைக் கண்கள் அவனுடைய ஊடு ருவும் பார்வையைச் சந்திக்கும். அவனுடைய முகப் பொலிவு, தோள்களின் திரட்சி எல்லா வற்றையும் ஒரு கணத்தில் கபளீகரம் பண்ணிக் கொண்டு அவள் பார்வை அப்பால் நகர்ந்து விடும். அப்போது அவளுடைய சந்தன வர்ண முகத்தில் செம்மை படர்ந்தாலும் தலைகுனி வதில்லை என்ற வீம்புடன் அவள் இருப்பதை யும் அவன் உணர்வான்.

சற்று நேரம் சென்று மறுபடி எதிர்திசையில் ஏதோ கவனம் ஈர்க்கப்பட்டது போல தலை திருப்பி, இவன் இன்னமும் தன்னையே வைத்த கண் வாங்காமல் பார்ப்பதை உணர்ந்து, முகம் சிவந்து, தன் பலவீனத்தை ஒப்புக் கொள்ளாமல் தலைநிமிர்ந்து... இப்படி எத்தனை நாட்கள், மாதங்கள்... பேச்சுக் கொடுக்க தைரியம் இருந் தால்தானே!

ஒருநாள் அவள் தன் பாட்டனி நோட்டுப் புத்தகத்தைப் புரட்டிய போது அதற்குள் அவ ளையும் அறியாமல் ஒரு சித்திரம் புகுந்து கொண்டிருப்பதைப் பார்த்து திடுக்கிட்டாள். மெலிதான அட்டையில் தீட்டப்பட்டிருந்த வண்ண ஓவியம். ஒளிரும் முழு மதி. நிலவு குடித்து பம்மி இருக்கும் ஒரு மேக மண்டலம். கண்சிமிட்டும் ஓரிரு தாரகைகள். நிழலாகத் தாழ்ந்து நீள்கின்ற ஒரு மரக்கிளை. அதில் அமர்ந்து ஒன்றையொன்று முத்தமிட்டுக் கொண்டிருக்கும் இரு பறவைகள். பரிசு பெறக் கூடிய வண்ணச் சித்திரம் அல்ல. கள்ளம் புகுந்து கொண்ட உள்ளங்களை உணர்த்திய ஓவியம். மனத்தின் ஆசைகளை வண்ணங் களாக வடித்தெடுத்து வடிவம் தந்த ஓவியம்.

அதை முதன் முதலில் பார்த்ததும் இதயத் துடிப்பு சட்டென்று நின்று பிறகு மீண்டும் இயங்க ஆரம்பித்தது. தொடவே பயமாயிருந் தது. தைரியத்தைத் திரட்டிக் கொண்டு ஒரு விரலால் அதன் விளிம்போடு வருடிக் கொடுத்த பிறகு அதை விட்டு கையை எடுக் கவே பிடிக்காமலிருந்தது. நாலு விரல்களால் அந்த லவ் பேர்ட்ஸை அன்புடன் தடவிக் கொடுத்து விரல்களை அதரங்களில் ஒற்றி எடுத்தபோது மெய்சிலிர்த்தது. எப்போது, எப் படி, சாமர்த்தியமாக இந்தப் படத்தை இந்த நோட்டுப் புத்தகத்தில் செருகினான்?

மறுநாள் பஸ்ஸில் அவன் புருவங்கள் கேள் விக்குறியில் உயர, இவள் மெதுவாக நோட்டுப் புத்தகம் திறந்து அந்தப் படத்தைக் காட்டி, தட விக் கொடுத்து புன்னகைக்க, அவன் நெளிய, இவள் தவிக்க... மௌன நாடகம் தொடர்ந்தது. ஒரே ஒரு வித்தியாசம் : படத்துக்குப் பதில் கடிதம் - பதில்....

அந்தக் கடிதங்களுள் ஒன்று இவள் தங்கை யிடம் சிக்கி விட, "அம்மா! இங்கே வந்து பாரேன் இந்த அநியாயத்தை" என்று அவள் அலற... விஷயம் அம்பலமாகி, அப்பா வீடே இரண்டுபடும்படியாக கூச்சல் போட்டு இரைய, அம்மா அவளையும் அடித்து தன்னையும் அடித்துக் கொண்டு அழ...

கொஞ்சம் முற்போக்கு சிந்தனை உள் ளவர் என்பதாகப் பார்வதம் கருதிய அவ ளுடைய மாமாவின் எதிரே காதலர் இருவரும் நின்று கண்ணீர் மல்கக் காதல் கதை சொன் னார்கள். தன் உதவி கோரி காதலர்கள் வந்து விட்டதில் மாமாவுக்கு அசாத்தியப் பெருமை. அவர்கள் கல்யாணத்தை முடித்து வைக்கவே ஆண்டவன் தன்னை அனுப்பி வைத்திருப்பதா கக் கருதி, இரு குடும்பத்தாரிடமும் மாறி மாறி வாதாடி, அதில் ஏற்ற இறக்கங்கள் கண்டு, காத லர்களையும் அதற்கேற்ப இன்ப துன்பங்களில் ஆழ்த்தி, கடைசியில் வெற்றி பெற்று... சுபம்.

அப்படி அவர்கள் நரசிம்ம மாமாவை அடிக்கடி சந்திக்க நேர்ந்த காலகட்டத்தில், "உங்க பாடு எவ்வளவோ தேவலாம் என் கதை யைக் கேள்" என்று அவர், தான் ஸ்ரீதேவி மாமி யின் கரம் பற்றுமுன் பட்டபாட்டை விவரித்

# வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



**அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!**

அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி
மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான
டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும்
தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




**YESDE ASSOCIATED BUILDERS LTD.**

**FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS**

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone : 4340224/4340210/4342667. Fax : 044-2344333

HITECH 9604



''அரசியலே வேணாம்னு ஒதுங்கிட்டீங்களே, ஏன்?''
''எத்தனை நாளைக்கு நான் மட்டும் தனியா என் கட்சிக்குள்ள இருக்கறது?''
— சந்தியூர். ஏ. கோவிந்தன்

இருந்தார்.

''இவ கழுத்துல நான் தாலி முடியறதுக்கு முன்னாடி சரியா பத்தொன்பது வீடுகள்ல பஜ்ஜி சொஜ்ஜி சாப்பிட்டு வயிற்றைக் கெடுத்துக் கொண்டேன். பாவம் அந்தப் பொண்ணுங்க. முதல்ல என் காலில் விழுந்து நமஸ்கரிச்சு மன்னிப்புக் கேட்டுட்டு அப்புறம்தான் பாடுங்க. அதனால அந்தப் பாட்டையும் சகிச்சுப்பேன். ஆனா அப்பா அம்மாகிட்ட வாய் திறந்து பேச தைரியம் கிடையாது. ஒரு கடிதாக எழுதி வைக்கக் கூடத் துணிச்சல் பிறக்காது. பத்தொன்பதாவது பெண்ணையும் தலையாட்டி மறுத்த பிறகுதான் அம்மாவுக்கே என்னமோ தோணிப் போய், ஏண்டா எந்தப் பொண்ணைப் பார்த்தாலும் பிடிக்கலே பிடிக்கலேன்னு சொல்லி அவாளோட சாபத்தை சம்பாதிச்சுக்கறே? மனசுல எந்த மூதேவியையாவது நினைச்சுண்டிருக்கியா என்ன? சொல்லித் தொலையேன்'' என்றாள்.

நானும் அதே கோபத்தோடு, ''வேணும்னா வரதுவோட பொண் ஜாதகத்தைக் கேட்டுத் தொலையேன்! வரவர உன் வாக்கு பொய்க்காம மூதேவியா இருந்தாலும் பேராவது ஸ்ரீதேவியா இருந்து தொலையட்டுமே'' என்றேன்.

அம்மா இடி விழுந்தது போலானாள். வரது என்ற வரதராஜன், அப்பாவிடம் காரியஸ்தராக வேலை பார்த்து வந்தவர். ஐம்பது பவுன் நகை, ஐம்பதாயிரம் ரூபாய்க்கு வெள்ளி சாமான்கள், ஏழு சுத்து முறுக்கு, எக்கச்சக்கமா பட்டுப் புடைவைகள் என்று மனசுக்குள் கணக்குப் போட்டுக் கொண்டிருந்த அம்மா, ''ஐயோ! ஐயோ! மயக்கிட்டானே, மாய்மாலம் பண்ணிட்டானே'' என்று லபோதிபோ என்று அடித்துக் கொண்டாள். அப்பாவோ வரதுவை அழைத்து, ''என்ன ஓய், உம்மை எனக்குக் கணக்கு எழுதச் சொன்னா, உம்ம பொண்ணை விட்டு என் பிள்ளையையே கணக்குப் பண்ணச் சொல்லிட்டீரே! என் சொத்தையெல்லாம் அபகரிக்க இப்படி ஒரு திட்டமா?'' என்று கர்ஜித்தார். வரது. எண்சாண் உடம்பு ஒரு சாணாகி நின்று கூசிக் குறுகிப் போனார்.

''இவனை ஊரை விட்டே விரட்டறேன்'' என்று பஞ்சாயத்துக்குப் போனார் அப்பா. அப்பாவுக்குப் பயந்த தீர்ப்பு எப்படி இருக்கும்னு புரிந்த வரதராஜன், ''வழக்கு நடப்பதற்கு முன் நானே போய் விடுகிறேன்'' என்று ஸ்ரீதேவியுடன் புறப்படத் தயாரானார்.

''அப்போ எங்கேருந்துதான் எனக்கு தைரியம் வந்ததோ, துணிந்து பஞ்சாயத்து தலைவர் பரமசிவப் பிள்ளை வீட்டுக்குப் போய் அவரை சந்திச்சு, ''அநியாயமா வரதராஜனை கெட்ட பேரோட விரட்டி அடிக்காத குறையா அனுப்பி வைக்காதீங்க. அந்தப் பொண்ணு குனிஞ்ச தலைநிமிராது; கடைக்கண்ணால் கூட என்னைப் பார்த்ததில்லே. நான்தான் அவ அழகிலே மயங்கி கல்யாணம் பண்ணிக்க ஆசைப்படறேன்'' என்று சொல்ல, அவரும் தர்ம நியாயம் கருதி, அப்பாவிடம் பேசி, அவர் எதிர்ப்பையெல்லாம் ஊர்ப் பிரமுகர்கள் உதவியுடன் தகர்த்து...

அப்பாவே அப்புறம் தன் ஸ்டேட்டஸுக்குக் குறையாமல் கல்யாணம் நடக்கணும்னு தீர்மானித்து... நாலு நாள் கல்யாணம்; ஆயிரம் பேர் சாப்பாடு; ரெட்டை நாயனம்; பாண்டு; சாரட்டு ஊர்வலம்...''

''கிருஷ்ணபரமாத்மாவே வந்து என்னைக் கொத்திக் கொண்டு போன மாதிரி எனக்கு இருந்தது'' என்று ஸ்ரீதேவி மாமி பரவசத்தோடு முடித்தாள்.

பழம் நினைவுகளில் ஆழ்ந்து போனதால் இரவு சரியாகத் தூங்காமல் அதிகாலையில் அலாரம் அடித்த பிறகும் பார்வதத்தின் கண்கள் சொக்கின. ''பார்வதம்! என்ன ஆச்சு உனக்கு? சீக்கிரம் எழுந்து காப்பி போடு! மணி ஆறாச்சு!'' என்று உலுக்கினான் ராகவன்.

அவள், அவன் கரங்களைப் பற்றிக் கொண்டு, ''ஏன்னா, நரசிம்ம மாமா கதை ஒரு மாதிரி, நம்ம கதை இன்னொரு மாதிரி, இப்ப கமலா கதை வேறு மாதிரி, அமலா கதை எந்த மாதிரியாகுமோ?'' என்றாள். கண்களில் இலேசான கலக்கம்.

''ஒரு மாதிரியுமில்லே. மாப்பிள்ளை மாலிகுலர் பயாலஜியிலே, 'டிஎன்.ஏ. தொடர்பும் பாரம்பரியக் காதல் பாட்டர்னும்'னு ஆராய்ச்சி பண்ணி அமெரிக்க யூனிவர்ஸிடியிலே கம்ப்யூட்டர்ல கட்டுரை எழுதிட்டிருப்பான். அமலா, ஆஸ்திரேலிய பல்கலைக் கழகத்திலேருந்து இன்டர்நெட் வழியா குறுக்கே புகுந்து அவன் கம்ப்யூட்டர் திரையில் 'ஐ லவ் யூ'ன்னு எழுதுவா, படம் போடுவா... பொருத்தமைப்பட வேண்டியதெல்லாம் இனிமே கம்ப்யூட்டர்கள்தான்'' என்றான்.

# கோட்டையிலிருந்து...


நாஞ்சில் மனோகரன்

...அமைச்சர்கள்

• கருணாநிதி அமைச்சரவையில் மூன்று அமைச்சர்கள் கையில் அ.தி.மு.க கொடி பச்சைகுத்திக் கொண்டுள்ளவர்கள்! நாஞ்சில் மனோகரன், முல்லை வேந்தன் மற்றும் சமய நல்லூர் செல்வராஜ் ஆகியோர்தான் அவர்கள்! இவர்களைத் தவிர ஆலடி அருணாவும் அ.தி.மு.க.வுக்கு சென்று வந்தவர்தான்.


• செல்வராஜ்

குத்திய.....

• பல கழக அமைச்சர்கள் புலம்பிக் கொண்டிருக்கிறார்கள். காரணம், அவர்களுக்கு உதவியாளர்களை நியமித்துக் கொள்ளும் சுதந்தரம் கூட இல்லையாம்! பெரும்பாலான அமைச்சர்களுக்குக் கழக மேலிடமே ஆட்களைத் தேர்ந்தெடுத்து உதவியாளர்களாக அனுப்பியிருக்கிறதாம். 'எங்களின் செயல்பாடுகளை உளவறியத்தான் இப்படிச் செய்கிறார்கள்' என்று சொல்லி வருத்தப்பட்டார் புது அமைச்சர் ஒருவர்!


• முல்லை வேந்தன்

• பச்சை.....

• கோடிக்கணக்கான ரூபாய் செலவில் ஜெயலலிதா அரசு வாங்கிய விமானத்தையும் ஹெலிகாப்டரையும் விற்று விடலாம் என்று முதலமைச்சருக்கு ஓர் எண்ணம் இருந்தாலும், சுற்றியுள்ள அதிகாரிகள் மற்றும் குடும்பத்தினர், 'வேண்டாம்' என்று சொல்கிறார்களாம்.

— கௌசி

# குட்டிச் செய்திகள்!

# 'இந்தியன்' படத்துக்கு போலீஸ் ஸ்டேஷனில் டிக்கெட்?

பிளாக் மார்க்கெட் ஆசாமிகள் அழுக்கு லுங்கியும் முண்டா பனியனுமாக தியேட்டர் வாசலில் நிற்பார்கள்; மடிப்பு கலையாத காக்கி யூனிஃபார்ம் தொப்பி, லத்தி சகிதம் போலீஸ் ஸ்டேஷனிலுமா இருப்பார்கள்?

''ஆமாம் சார்! உதயம் தியேட்டர்ல 'இந்தியன்' படத்துக்கான டிக்கெட் அசோக் நகர் ஆர்-6 போலீஸ் ஸ்டேஷனில் கிடைக்குது சார்!'' என்று அதிர்ச்சி அளித்தார்கள், தியேட்டர் வாசலில் ரூபா நூறும் நூற்றைம்பதும் கொடுத்து பிளாக்கில் டிக்கெட் வாங்க மனம் வராமல் சலிப்புடன் திரும்பிய சிலர்.

வியப்பும் அதிர்ச்சியும் ஒரு சேர நம்மைத் தாக்க, மேலும் புலன் விசாரிக்கத் தொடங்கியதும் அடுக்கடுக்கான ஆச்சர்யங்கள் அங்கே காத்திருந்தன!

பொதுவாகவே எல்லா தியேட்டர்களிலும் 'போலீஸ் கோட்டா' என்று கொஞ்சம் டிக்கெட் ஒதுக்கி வைப்பது 'மாமூல்'தான்.

தியேட்டர்காரர்களே பிளாக்கில் டிக்கெட் விற்கிற இக்காலத்தில், ஏரியா போலீஸ்காரர்களை 'குஷி'ப்படுத்த, ரிலீஸாகும் புதுப் படங்களுக்கான டிக்கெட்டுகள் உடனடியாக போலீஸ் ஸ்டேஷனுக்கு அனுப்பி வைக்கப் பட்டு விடுமாம்.

'இந்தியன்' போல, எப்போதாவது வரும் - பரபரப்பாக எதிர்பார்க்கப்படும் படங்களென்றால் சில போலீஸ் உயர் அதிகாரிகள் கூட, தியேட்டரில் முன்னதாகச் சொல்லி வைத்து, தியேட்டருக்கு அருகிலுள்ள போலீஸ் ஸ்டேஷனில் டிக்கெட்டுகள் கொடுத்து வைக்கச் சொல்லுவார்களாம். அவர்களுக்குத் தெரிந்தவர்கள் கேட்டால், ''இன்ன ஸ்டேஷனில்

போய் நான் சொன்னதாகச் சொல்லுங்கள், கிடைக்கும்'' என்று அனுப்புவார்களாம்!

அதற்கும் அதிகப்படியாக வந்து சேரும் டிக்கெட்டுகள் ரகசியமாக, ஸ்டேஷனிலேயே விற்கப்படுகின்றன என்று அறிய வந்தபோது அதிர்ச்சியாக இருந்தது!

விசாரிக்கக் களத்தில் இறங்கினோம்.

உதயம் தியேட்டர் வளாகத்தில் காவலுக்கு இருந்த ஒரு போலீஸ்காரரை அணுகி, "சார், நான் ஐ.ஜி ஆபீஸ்லேருந்து வரேன் — அனுப்பினார். ஒரு டிக்கெட் வேணும்..."

நாம் கொக்கி போட்டதும் ஏற இறங்கப் பார்த்தவர், "இங்க எப்படி சார் கிடைக்கும்? நீங்க ஆர்-6 போங்க. ஏற்பாடு பண்ணுவாங்க" என்றார்.

## தியேட்டர்காரர்களும் உடந்தையா?

'உதயம்' தியேட்டர் மானேஜர் ரத்னத்தைத் தொடர்பு கொண்டு இது குறித்துக் கேட்ட போது அழாத குறையாகப் புலம்பித் தீர்த்துவிட்டார்.

"போலீஸ்காரர்கள், எங்களிடம் கேட்டு டிக்கெட் வாங்கிப் போவது வாஸ்தவம்தான். எல்லாப் படங்களுக்கும் இல்லை என்றாலும் குறிப்பிட்ட சில - எதிர்பார்ப்புள்ள படங்களுக்கு நிச்சயம் டிக்கெட் கேட்பார்கள். உயர் போலீஸ் அதிகாரிகள், நண்பர் - உறவினர்களுக்காக என்று கேட்டே வாங்கிப் போவார்கள். அது மட்டும்தான் எனக்கு உறுதியாகத் தெரியும். அவர்கள் டிக்கெட்டை விற்கிறார்களா என்பதெல்லாம் எங்களுக்குத் தெரியாது.

"போலீஸ் துறை மட்டுமின்றி, ஒரு தியேட்டர் நடத்த எத்தனையோ துறையினரின் ஒத்துழைப்பு வேண்டி இருக்கிறது. கார்ப்பரேஷனிலிருந்து, தொலைபேசித் துறையினரிடமிருந்து, மின்சார வாரியத்திலிருந்து, மெட்ரோ வாட்டர் அலுவலகத்திலிருந்து எல்லாம் மொத்தமாக டிக்கெட் கேட்பார்கள். எப்படி மறுக்க முடியும்? அன்புத் தொல்லைதான் என்றாலும் தவிர்க்க முடியாத தொல்லை!" என்றார் ரத்னம்.

ஆர்-6 ல் நாம் நுழைந்த சமயம் ஒரு மீசைக்காரர் சிவில் உடையில் வெளியே வந்து டி.வி.எஸ் - 50ஐ ஸ்டார்ட் பண்ணிக் கொண்டிருந்தார்.

அவரை அணுகி, மீண்டும் அதே பல்லவி. ''சார் நான் ஐ.ஜி. ஆபீஸ்லேருந்து வரேன். - அனுப்பினார். இந்தியன் படத்துக்கு ஒரு டிக்கெட்.''

"தியேட்டர்ல தொல்லை தாங்க முடிய லைன்னுதான் தியேட்டர்காரங்களே இங்க கொடுத்து விக்க சொல்றாங்க. எதுக்கும் நீங்க ரைட்டரையோ, எஸ். ஐயையோ பாருங்க'' என்று பிடி கொடுத்தார்.

உள்ளே சென்று இருவரில் ஒருவரை சந்தித்து, அதே பல்லவியைப் பாடியதும் 'நீங்கள் யார், எந்த ஊர், இங்கே டிக்கெட் இருக்கிற விஷயத்தை யார் சொன்னது' என்றெல்லாம் கேள்விகள் கேட்டு, "டிக்கெட் தீர்ந்துருச்சே சார்!" என்று முத்தாய்ப்பு வைத்தார்.

ஐ.ஜி ஆபீசிலிருந்து யாராவது போன் செய்தால் எப்படியும் டிக்கெட் வாங்கித் தந்து விடுவார்கள் போலிருக்கிறது. அல்லாத பட்சத்தில், அவர்கள் கையில் உபரியாக டிக்கெட்டுகள் இருந்தால் கிடைத்துவிடும் போலும்.

காக்கி டிரெஸ்ஸில் கறுப்பு சோலிகள் நடப்பது நல்லதல்ல. கலைஞர் அரசாங்கம் உடனடியாக இதைக் கவனித்தாக வேண்டும்.




மோப்பம் :
**அல்சேஷன் 003**

**வட்டமேஜை**

## கவிழ்ப்பது தானே காங்கிரஸ் கலாசாரம்?

### ரூ. 20 பரிசு பெறும் கடிதம்.

♦ "ஆட்சி நிலைக்குமா..?" தலையங்கம் படித்தேன். மற்ற கட்சிகள் ஆட்சி அமைக்க, காங்கிரஸ் ஆதரவு தருவது போல் நடித்து பிறகு ஆட்சியைக் கவிழ்ப்பது நடக்கக்கூடிய காரியம்தான். இதை 'காங்கிரஸ் கலாசாரம்' என்று கூடச் சொல்லலாம். சரண்சிங் ஆட்சியை இந்திராகாந்தி கவிழ்த்தார். சந்திரசேகர் ஆட்சியை ராஜீவ்காந்தி கவிழ்த்தார். நரசிம்மராவிற்கு தற்போது அதே போன்ற வாய்ப்பு கிடைத்திருக்கிறது!

தஞ்சாவூர் - 1, வெ. முருகானந்தம்.

♦ வாஜ்பாய் ஹிந்துத்வத்தை மூட்டை கட்டிவிட்டு நெறியாட்சி நடத்த ஒப்புக் கொண்டாலும் விசுவ ஹிந்து பரிஷத், சிவசேனாக்காரர்கள் விடுவார்களா என்ன? அவர்கள் மதவெறியாளர்களாயிற்றே!

சூரமங்கலம்,

ஏ. ஹஸன்முஹம்மத் அசனப்பா.

♦ நிலையான ஆட்சி தருவதாகச் சொல்லிச் சொல்லியே, நாட்டை 'திவாலாக' ஆக்கிவிட்டார்கள். அதனால் 'அல்ப ஆயுள்' ஆட்சியே அமையட்டும்! மக்கள் ஆதரவைப் பெற அவர்கள் நல்லாட்சி தர முயலுவார்கள். அதிக மெஜாரிட்டி பலத்துடன் ஆட்சி அமைக்கும் கட்சியினர் வோட்டுப் போட்ட மக்களை மதித்து நடப்பதில்லை. போனமுறை தமிழகத்தில் பார்த்தோமே!

திட்டக்குடி - 106, அ. சரவணன்.

♦ சந்தேகமில்லாமல், பா.ஜ.க. ஒரு மதவாதக் கட்சிதான். வாஜ்பாய் மிதவாதியாக இருந்த போதும், பாரதிய ஜனதா கட்சியின் முக்கிய தலைவர்களுள் ஒருவரான சிக்கந்தர் பக்த் விஷயத்திலேயே அவர்களால் நியாயமாக நடந்து கொள்ள முடியவில்லை. அமைச்சரவை அமைக்கும் பணியில் வாஜ்பாய், அத்வானி இருவருமே உட்கார்ந்து முடிவு எடுத்ததாகக் கூறப்படுகிறது. மூத்த தலைவரான சிக்கந்தர் பக்த் புறக்கணிக்கப் பட்டு, கட்சியில் அவருக்கு இளையவரான மஹாஜனுக்கு' பாதுகாப்புத் துறை அளிக்கப்பட்ட விதத்திலிருந்தே, அவர்கள் இருவரும் தன்னிச்சையாக செயல்பட முடியாத அளவிற்கு, கட்சிக்குள்ளேயே சில சக்திகள் அவர்களை ஆட்டுவிப்பது தெரிகிறது. சிக்கந்தர் பக்த் பதவி ஏற்றும், இலாகாவிற்கு வந்து உட்காராமல் 'மக்கர்' செய்த பிறகு, அவருக்கு வெளியுறவுத் துறை கூடுதலாக அளிக்கப்பட்டது. ஆரம்பத்திலேயே உட்கட்சிப் பூசல்களை, வெளியே தெரியுமளவிற்குக் கொண்டு வந்துவிட்டார்கள். இவர்களது ஆட்சி நிலைக்குமா என்று நீங்கள் கேட்டிருப்பது சரியானதுதான்!

வேலூர் - 1, ஜி. ஸ்ரீநிவாச மூர்த்தி.

♦ மின் வெட்டுக்குப் பெயர்போன மேற்கு வங்கம் இன்று அண்டை மாநிலங்களுக்குக் கூட மின்சாரம் கொடுக்கும் அளவிற்கு உயர்ந்து விட்டது என்பதைப் படித்த போது வியப்பாக இருந்தது.

சிறுமுகை, ஜி. கதிரேசன்.

♦ குற்றம் சாட்டப்பட்டு, நெஞ்சுவலி திடீரென்று வந்து அரசாங்க ஆஸ்பத்திரியில் குளிர்சாதனம், கலர் டிவி. செல்லுலர் போன், அவ்வப்போது சுகாதாரத் துறை அமைச்சரின் அன்பான விசாரிப்பு என ராஜபோக வாழ்க்கையை அனுபவித்து, தற்போது காலத்தின் கட்டாயத்தால் மீண்டும் சிறைச்சாலைக்கே தள்ளப் பட்டிருக்கும் தினகரன், ஆதிராஜாராம் பற்றிய கட்டுரையைப் படித்த போது ஆத்திரம்தான் வந்தது. குற்றம் இழைத்தோரின் கொலுமண்டபமாக ஆஸ்பத்திரிகள் மாறாமல், எவ்வித பேதமும் இன்றி எல்லா கைதிகளையும் சிறைச்சாலையில் ஒரே சம உணர்வோடு நடத்திடும் வகையில் சிறை விதிகள் கட்டாயமாகத் திருத்தி அமைக்கப்பட வேண்டும்.

மதுரை - 14, கோமதி மணாளன்.

♦ நல்ல வேளை, தேர்தல் வராமல் இன்னும் ரெண்டு ஆண்டுகளுக்கு மத்திய, மாநில அரசுகள் ஆட்சி செய்திருக்குமேயானால், மீதி இருக்கின்ற அறைகளும் நட்சத்திர வசதியைப் பெற்று சுகபோக சிறை வாழ்க்கை அனுபவித்திருப்பார்கள், இந்த வி.ஐ.பி. குற்றவாளிகள்! இப்படியெல்லாம் செய்ததற்குப் பரிசுதான் தமிழக மக்கள் வாரி வழங்கி விட்டார்களே!

கொப்பம்பட்டி,

செ.அன்புமதிகோபிநாத்.

♦ ராணி அண்ணாதுரை, தம் கணவர் முதல்வராக இருந்தபோது கூட, யாருக்கும் சிபாரிசு செய்ததில்லை என்பதைப் படித்தபோது வியப்பாக இருந்தது.

காப்பரத்தாம்பட்டி,

கே. ராஜாதிருவேங்கடம்.

♦ இந்த ''ஸ்டார்'னாலே பிரச்னை! இப்பத்தான் ஜெயலலிதா என்ற 'ஸ்டார்' நம்மை விட்டு விலகியது. அதற்கு சூப்பர் ஸ்டார் உதவி செய்தார். இப்பொழுது Rogue star பூமியையே பயமுறுத்த ஆரம்பித்து விட்டது!

திருச்சுழி. சுந்தர். அழகேசன்

# 4

எம்பெருமான் திருநாமங்கள் அவன் பெருமைகளைக் காட்டிலும் மேலானது என்று சொன்னேன்... வேதமே சொல்கிறது: 'யக்ஞமே பண்ண வேண்டாம்; அவன் திருநாமத்தைச் சொன்னாலே போதும், யக்ஞம் பண்ணின பலன் கிடைக்கும்...

கலியுகத்திலே கடும் அனுஷ்டானங்களைக் கடைப்பிடித்து யக்ஞமெல்லாம் பண்ண முடியாதுன்னு வேதத்துக்கே தெரியும்!

கீதையில் கடைசிப் பேச்சாக வருவதை சரம ஸ்லோகம்னு சொல்றது. மகா மந்திரம் அது. அது என்ன சொல்கிறது தெரியுமா...? 'எல்லா தர்மங்களையும் நன்றாக விட்டு, என்னையே சரணமடைவாய்...' என்கிறது.

தர்மங்களை விடுவது என்பது நித்ய கடமைகளான சந்தியாவந்தனம், மாத்யானிகம் போன்றவற்றை விட்டு விடுவதல்ல... நியமத்தோடு பண்ண முடியாத பெரிய யக்ஞங்களை விட்டு விடலாம் என்று அர்த்தம்.

இதற்கு இன்னொரு வியாக்யானமும் சொல்வதுண்டு... கலியுகத்திலே எல்லா தர்மங்களும் நம்மை விட்டு தூர, தள்ளி அகன்று போய்விடுகின்றன....! 'இவனாலே யக்ஞமெல்லாம் முறைப்படி பண்ண முடியாது' என்று அவற்றுக்குத் தெரியுமாம்! அதனால்தான் நம் மேலே பரிவு கொண்டு, வீணான விஷயங்களிலே நாம் காலத்தைக் கழித்துவிட அனுமதிக்காமல் மாற்றுவழி சொல்லியிருக்கிறது. யக்ஞம் பண்ணினால் என்ன திருப்தியை பகவான் அடைவானோ, அதே திருப்தியை அவன் திருநாமத்தைச் சொன்னால் அடைஞ்சுடுவான். எம்பெருமான் நாமங்களால் சமஸ்த யக்ஞ பலனும் நமக்குக் கிடைக்கும்.



பகவான் நாமா நமக்கு என்ன உபகாரம் பண்றது என்று கேட்டால் மூன்று விதமா உபகாரம் பண்றது.

திருஷ்ட பலம்

அதிருஷ்ட பலம்

திருஷ்டாதிருஷ்ட பலம்

என்று மூன்று வகையான பலத்தைக் கொடுக்கிறது.

நேராக, கண் கூடாக எல்லோரும் பார்க்கும்படியான நேர் பலன், - நேராக வந்து காரியத்தை நடத்திக் காட்டும் பெருமை, திருநாமத்துக்கு உண்டு. இதைத்தான் திருஷ்ட பலம் என்கிறது.

திருஷ்ட பலத்துக்கு உதாரணமாக பாகவதத்திலே ஒரு சம்பவம் வருகிறது:

ஜாமி என்றால் நல்ல ஸ்த்ரீ என்று அர்த்தம். அஜாமி என்றால் அதற்கு நேர் எதிரானவர்! அத்தகைய ஸ்த்ரீயின் சேர்க்கையையுடையவனாக இருந்தான் அஜாமிளன். காட்டிலே தர்பை கொண்டு

முக்கூ

லக்ஷ்மி

வரப் போனவன், அங்கு பார்த்த ஸ்த்ரீயுடன் தங்கி பத்து குழந்தைகளைப் பெற்றான். எண்பத்தெட்டு வயது நிறைந்த காலத்தில், அஜாமிளன் படுத்த படுக்கையானான். அந்த ஸ்த்ரீ அவனைக் கைவிட்டு விட்டாள்; கவனிக்க யாருமில்லை.

அந்திம காலத்திலே மூன்று யம பட்டர்கள் வந்து அவன் பக்கத்திலே நிற்கிறார்கள். (வழக்கமாக இருவர்தான் வருவார்கள்... ஆனால் அவன் 'மகா பாபி' என்பதால் யமன் மூன்றாவதாக ஒரு ஆளை அனுப்பினானாம்!)

நடுநடுங்கி, கதிகலங்கிப் போனானாம் அஜாமிளன். என்ன செய்வதென்று புரியாமல், சற்று தூரத்திலே விளையாடிக் கொண்டிருந்த தனது பத்தாவது புதல்வனைக் கூப்பிட்டானாம்...

"நாராயணா...!" என்று அவன் தன் குழந்தையைத்தான் கூப்பிட்டான். கூப்பிட்டவுடனேயே, பீதாம்பரதாரியாக, சங்க சக்கரத்தோடு வந்தார் எம்பெருமான். நான்கு பேர் வைகுண்டத்திலிருந்து வந்து யமதூதர்களை விரட்டினார்கள்!

அந்தக் கட்டத்திலே அஜாமிளன் எண்ணினான்: 'அடடா! இப்படிக் கடைசி காலத்திலே என் குழந்தையின் பெயரைச் சொன்னதற்கே பகவான் ஓடி வந்து காப்பாற்றினானே; ஆயுள் முழுவதும் அவன் பெயரைச் சொல்லியிருந்தால் எத்தனை கதிபலன் அடைஞ்சிருப்பேன்....'

அப்புறம் அஜாமிளன் கூட முக்தி அடைந்தான். அதனாலே, 'அவனைப் போல் நாமும் இருக்கலாமே' என்று எண்ணினோமேயானால், அது நம் கையில் இல்லை. நம் சரித்திரம் அஜாமிள சரித்திரமாகாது! அப்போதைக்கிப்போதே நாம் பகவன் நாமாவைச் சொல்லி வைக்கணும்...!

ஒருத்தர் ரொம்ப உடம்பு சரியில்லாமல் படுத்த படுக்கையாயிருந்தார். போகிற வழிக்கு அவருக்குப் புண்ணியம் கிடைக்கட்டுமே என்று, அவருடைய கடைசிப் பிள்ளையைக் காட்டி, "இவன் யாரு?" என்று கேட்டார்கள். (அவர் கடைசிப் பிள்ளைக்கு கோவிந்தன் என்று பெயர்.)

"இவனா...? இவன் என் கடைசிப் பிள்ளை" என்று சொல்லிவிட்டு உயிரை விட்டுவிட்டார் அவர்!

அஜாமிள சரித்திரத்தைச் சொன்னது திருஷ்ட பலம் பற்றித் தெரிஞ்சுக்கறதுக்காக. எல்லோரும் அறியும் வண்ணம் நேராக உணர்த்தும் பலனை அவன் நாமத்தின் மூலம் பெறுகிறோம்.

அடுத்து அதிருஷ்ட பலம். திரௌபதி சரணாகதி அடைந்த போது அவளுக்குப் புடைவை சுரந்தது அதிருஷ்ட பலத்துக்கு உதாரணம் - அதாவது மறைந்து நின்று உதவக்கூடியாது பகவான் திருநாமம்.

திருஷ்டா திருஷ்ட பல

நரசிம்மாச்சார்யார்



# நம்புங்கள் நிஜம்!

**கே**ரளாவில் தேர்தல் முடிந்த பின், பாலக்காட்டிலுள்ள ஒரு வங்கிக்கு ஒரு காங்கிரஸ் தொண்டர் வந்தார். மாவட்ட காங்கிரஸ் கமிட்டிக்கு அந்த வங்கியில் அக்கவுண்ட் இருந்தது.

> **"பணத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வது?"**

வந்தவர், ரூ. 5000-ஐ காங்கிரஸ் கட்சியின் கணக்கில் டெபாஸிட் செய்த போது, வங்கி அதிகாரிகள், "இந்தப் பணம் ஏது? கட்சிக் கணக்கில் ஏன் சேர்க்கிறீர்கள்?" என்று கேட்டிருக்கிறார்கள்.

அதற்கு அவர் சொன்ன பதில் :

"இது, தேர்தல் பிரசாரத்துக்காகக் கட்சி எனக்குத் தந்த தொகையில் பாக்கி. இனிமேல் இதை வைத்துக் கொண்டு என்ன செய்வது? கட்சிக் கணக்கிலேயே சேர்த்து விட்டால் கட்சிக்காவது உபயோகமாகுமே!"

## இதுவும் நிஜம்!

**கே**ரளாவில் காங்கிரஸ் கூட்டணி வெற்றி பெற்றால், 'நிச்சயம் அமைச்சர் ஆவார்' என்று நம்பப்பட்ட ஒரு வேட்பாளருக்கு, அவர் 'வேண்டாம், வேண்டாம்' என்று சொல்லச் சொல்லக் கேட்காமல் பெரும் தொழிலதிபர்கள் பணத்தைக் கொண்டு வந்து கொட்டினர், தேர்தல் செலவுகளுக்காக.

தேர்தலில் அந்த வேட்பாளர் எதிர்பாரா விதமாகத் தோற்று விட்டார். காங்கிரஸும் தோல்வி அடைந்து விட்டது.

தேர்தல் முடிவுகளெல்லாம் வந்த பின், அந்த வேட்பாளர், தமது பிரதிநிதிகளை, அந்தத் தொழிலதிபர்களிடம் அனுப்பி, தேர்தல் செலவு போக மிச்சமிருந்த பணத்தைக் கணக்கு சுத்தமாக திருப்பிக் கொடுத்து விட்டார்!

காங்கிரஸில் ஹவாலாக்காரர்கள் மட்டும் இல்லை!

திருவனந்தபுரத்திலிருந்து : **எஸ்.எஸ். மணி**



னுக்கு உதாரணம் கஜேந்திர மோக்ஷம்.

'ஆதிமூலமே' என்று கஜேந்திரன் அழைத்ததுமே பகவான் அதிவேகமாக வந்து ரக்ஷித்திருக்கிறான்.

"ரங்கநாதா! உன்னை நமஸ்கரிக்கவில்லை நான்... அன்னைக்கு கஜேந்திரன் அழைத்ததும் ஓடி வந்தாயே.... அந்த வேகத்துக்கு நமஸ்காரம்..." என்கிறார் பராசரபட்டர்! அத்தனை வேகம்!

வேகமாக வந்ததுடன், முதலையிடமிருந்து கஜேந்திரனை விடுவித்தான்; அந்த யானைக்கு மோட்சத்தையும் அளித்தான். உயிரைக் காப்பாற்றிய திருஷ்ட பலத்துடன் மோட்சத்தை அளித்த அதிருஷ்ட பலமும் சேர... திருஷ்ட திருஷ்ட பலம் வாய்க்கப் பெற்றது.

அவனை மனசார நினைத்து அன்னம் எடுத்து ஹோமம் பண்ணுங்கள்; அப்படியில்லையென்றால் மனசார அவன் நாமத்தைச் சொல்லுங்கள். எம்பெருமான் அனுக்கிரஹம் விசேஷமாகக் கிடைக்கும். இப்படி மூன்று வகையான பலங்களும் கிடைக்கும்.

'திருநாமத்தைச் சொன்னால் மோட்சம் கிடைச்சுடுமா?' என்றால், அது நேரே மோட்சம் வாங்கித் தராது. சொல்லச் சொல்ல பக்தி ஏற்படப் பண்ணும்; பக்தி உண்டாக உண்டாக, இந்த ஆத்மா அவனுடையதுன்னு நினைப்போம். அதை அவன் திருவடியிலே சமர்ப்பிப்போம்; அதன் விளைவாக மோட்சம் கிடைக்கும். இதுவே அவன் திருநாமம் நமக்குப் பண்ணக் கூடிய மிக உயர்ந்த உதவி.

**அ**ப்படிப்பட்ட திருநாமங்கள் அடங்கியதாலேதான் விஷ்ணு சஹஸ்ரநாமத்தை ரொம்ப உயர்த்திச் சொன்னது.

வேதம் சொல்லி ஹோமம் வளர்க்கிறதுக்குப் பதிலாக இப்படி நாமங்களைச் சொன்னால் போதுமா என்று கேட்டால்.... மூன்று வேதங்களின் சாரம் காயத்ரி என்கிற மகா மந்திரம். இந்த உத்தமமான மகாமந்திரத்தை விளக்கும் படியாக அமைந்திருக்கிறது விஷ்ணு சஹஸ்ர நாமம்.

காயத்ரி மகாமந்திரத்தை தினமும் சொன்னவர்களுக்கு அசாத்யமான ஆசீர்வாத பலம் உண்டு:

காகிநாடா பக்கத்திலே ஒரு சமஸ்தானத்து ராஜா. அவர் குழந்தைக்குப் புண்யாகவசனம். வேத வித்துக்களால் சபை நிரம்பியிருக்கும் சமயம் குழந்தை தவழ்ந்து போய் அரண்மனையில் இருந்த தண்ணீர் தொட்டியில் விழுந்து மாண்டு போய்விட்டது! நடந்ததை மறைத்து விட்டான் குழந்தையின் அம்மா. துக்கம் சம்பவித்த இடத்திலே சாப்பிடக் கூடாது. எல்லா வேத வித்துக்களும் பட்டினி

## For the attention of our readers

Advertisements have been appearing in newspapers for tourist guides and business directories published by Kalki Interlink Private Limited.

We have been receiving a number of telephonic and written enquiries regarding the above.

We wish to make it clear that the firm Kalki Interlink Pvt. Limited is in no way connected to Kalki magazine or its group of publications.

We have initiated legal action against the said company challenging the use of the name Kalki.

Publisher
KALKI
47, Jawaharlal Nehru Road,
Madras - 600 097.

யாய்ப் போவார்களே என்ற எண்ணத்தில் குழந்தை இறந்ததைச் சொல்லாமல், மடியிலே அதை மறைத்து வைத்துக் கொண்டாள் ராணி.

புண்ணியாகவசனம் ஆகி, ஒவ்வொரு வேத விற்பன்னரும் கிட்டே வந்து குழந்தைக்கும் அட்சதை போட்டு ஆசீர்வாதம் பண்ணு கிறார்கள். (ஆந்திர தேசத்தில் அப்படித்தான் வழக்கம்.)

கொஞ்சம் நேரத்திலே குழந்தையின் கால் அசைகிறது....! ராணிக்கு ஒரே ஆச்சரியம். மாண்டு போன குழந்தை திரும்பவும் உயிர் பெற்றதே!

அந்த மாயம் எப்படி நிகழ்ந்தது என்றால், பெரியோர்களின் ஆசீர்வாத பலத்தாலே.

அவர்களுக்கு எப்படி பலம் வந்தது....? காயத்ரி மகாமந்திரத்தை தினமும் சொன்ன தாலே.... சாமானியர்கள் ஆசி சொன்னால் பலிக்குமா என்ன! அனவரதம் காயத்ரியை ஜபிப்ப தனாலேதான் அந்த அதிகாரம் கிடைக்கும்; வாக்கு பலிக்கும்.

ஒருவருக்கு உபநயனம் செய்விக்கிற காலத் தில், பிரம்மோபதேசத்தின்போது அப்பா, மாமா அல்லது வேறு உயர்ந்த அதிகாரி காயத்ரி மந்திரத்தை உபதேசம் பண்ணணும். உபதேசம் பண்ணுகிறவர் நித்யம் ஆயிரம் முறை காயத்ரி ஜபிப்பவராய் இருக்க வேண் டும்! ஒருவரிடம் பத்தாயிரம் ரூபாய் இருந்தால் தானே இரண்டாயிரம் ரூபாயை அவராலே கடனாகத் தர முடியும். அதுமாதிரிதான் இது...

**கா**யத்ரிக்கு ஏன் சிறப்பு...?

காயத்ரியானவள் பிராத காலத்தில் சிவப்புப் பட்டுடுத்தி ரிக் வேதத்தை உச்சரிக் கிறாள்.

அவளே உச்சி காலத்தில் வெண்பட்டு உடுத்தி யஜுர் வேதம் கூறும் சாவித்ரியாகக் காட்சி தருகிறாள்.

சாயங்காலத்தில் கறுப்பு உடுத்தி, சாமவேதம் ஓதும் சரஸ்வதியாக இருக்கிறாள்.

இதில் ஒரு தர்ம சூட்சமம் அடங்கியிருக் கிறது: ஒரு நாள் பொழுதில் மூன்று வேதமும் பூரணமாகச் சொல்லி விடுகிறாள் காயத்ரி. அவள் குழந்தைகளான நமக்குச் சிரமம் தராமல், அவள் சிரமப்படுகிறாள். நீங்கள் என்னைச் சொன்னால் போதும் என்கிறாள்! அவள் சிரமத்தை எடுத்துக் கொண்டு நம் சிரமத்தைப் போக்குகிறாளே.... அவளைக் காட்டிலும் கருணை உள்ளவர்கள் யார் உண்டு?

விஷ்ணு சஹஸ்ரநாமத்துக்கு வருவோம்... கருணை வடிவான காயத்ரியின் முதல் எட்டு அக்ஷரத்தை விளக்க வந்தது விஷ்ணு சஹஸ்ர நாமத்தின் முதல் சுலோகத்தின் முதல் பாதம்.

அடுத்த எட்டு காயத்ரி அக்ஷரங்கள் விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் இரண்டாவது சுலோகத்திலே விளக்கம் பெறுகின்றன.

மூன்றாவது எட்டை விளக்க வந்தது சஹஸ்ரநாமத்தின் மூன்றாவது சுலோகம்.

இந்த மூன்று சுலோகங்களுமே சர்வ மந்திரங்களுக்கும் சாரமான காயத்ரியை எடுத்துச் சொல்லுவதால் அவற்றுக்குச் சிறப்பு அதிகம்.

இந்த முதல் மூன்று சுலோகங்களுக்குள்ளே ஓர் அவதாரம் பேசப்படுகிறது.

விஷ்ணு சஹஸ்ரநாமத்தை பீஷ்மர் சொல்ல, கிருஷ்ணன் கேட்கிறான். ஆனால் எதிரே உள்ள கிருஷ்ணரை ஸ்தோத்திரம் பண்ண வில்லை பீஷ்மர்! நரசிம்ஹ அவதாரத்தை தியானம் பண்ணுகிறார்!

விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் ஆதியிலேயும் இடையிலேயும் கடைசியிலேயும் நரசிம்ஹ அவதாரம் பற்றிச் சொல்லப்படுகிறது.

இந்த சிறப்பையும் நினைவில் வைத்துக் கொள்வோம்.

(தொடரும்)



**''என் டாக்டர்! 9-ங்கிற நம்பர் உங்களுக்கு ராசியா இருக்கலாம்; அதுக்காக ஆஸ்பத்திரி ரூமுக்கெல்லாம் 9ஏ, 9பி, 9சி...ன்னு வைக்கணுமா என்ன?''**

**— சீர்காழி வி. ரேவதி**

# அதிர்ஷ்ட எண் பார்த்து அறை தேடுகிறார்கள்!

## 'பகுத்தறிவு'க் கட்சியின் பரிதாப எம்.எல்.ஏக்கள்!


• எம்.எல்.ஏ. ஹாஸ்டல்

• புறக்காவல் நிலையம்

புதிய எம்எல்ஏ ஹாஸ்டல்...

ஒரு மாதத்திற்கு முன்பு வரை, பெரும்பாலான அறைகளின் கதவுகளில் பயமுறுத்திக் கொண்டிருந்த ஜெயலலிதாவின் படம் தண்ணீர் ஊற்றிச் சுரண்டியெடுக்கப்பட்டு, கதவுகள் சுத்தமாகி இருக்கின்றன! படுக்கை விரிப்புகள், திரைச் சீலைகள் என்று எல்லாம் புதுசு! வெட்டவெளியில் ஷாமியானா போடப்பட்டு புறக்காவல் நிலையம் உருவாகி இருக்கிறது.

இந்த முறை புது எம்.எல்.ஏக்களுக்கு அறைகள் ஒதுக்கி முடிவதற்குள் 'தாவு' தீர்ந்து விட்டது அதிகாரிகளுக்கு.

'First come first served' என்ற அடிப்படையில்தான் அறைகள் வழக்கமாக ஒதுக்கப்படும். ஆனால் இம்முறை பல சட்டமன்ற உறுப்பினர்கள் அதிர்ஷ்ட எண் என்ற கண்ணோட்டத்தோடு அறைகளைத் தேடியதால், சிரமம் ஏற்பட்டது" என்றார் ஓர் அதிகாரி.

44, 53, 62 போன்று கூட்டுத் தொகை எட்டு வரும் எண்கள் என்றாலே வேண்டாம் என்று மறுத்து விட்டார்களாம் உறுப்பினர்கள்! இதை உத்தேசித்துத்தான் கீழ்த் தளத்தில் 8, 13 மற்றும் 17 ம் நம்பர் அறைகள், தங்குவதற்கு இல்லாமல் வேறு உபயோகத்திற்கு வைக்கப்பட்டுள்ளன.

"1971-76, 1989-91 ஆகிய கால கட்டங்களில் கழக சட்டமன்ற உறுப்பினராக இருந்தவர்களுக்குத்தான் பெரும்பாலும் கருணாநிதி ஸீட் கொடுத்திருக்கிறார். இந்தப் பழைய நபர்களை விட புதிய, இளைஞர்களான சட்டமன்ற உறுப்பினர்கள் தாம் அதிர்ஷ்ட நம்பர் பார்த்து அறை தேடுகிறார்கள்! முதல்வரே 13ம் தேதி தான் பதவி ஏற்றார். தவிர அவரது அமைச்சரவையில் 26 பேர்! (கூட்டுத் தொகை 8.) இந்தச் சூழ்நிலையில் கலைஞரைத் தலைவராக ஏற்றுக் கொண்டவர்கள் பகுத்தறிவுக்கு முரண்படுவது கொஞ்சம் ஆச்சர்யமாகத்தான் இருக்கிறது!" என்று சொன்னார் பொதுப்பணித் துறையைச் சேர்ந்த அதிகாரி ஒருவர்.

வழக்கம் போல இரண்டாவது மாடி, அறை

எண்கள் 201 முதல் 210 வரை தாய்க்குல சட்டமன்ற உறுப்பினர்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ளன. தேர்ந்தெடுக்கப்பட்ட பத்து பெண்களில் இருவர் அமைச்சர்களாகிவிட்ட படியால், அவர்களுக்கு இங்கு அறை கிடையாது.

கடந்த சில முறைகளாக, சட்டசபை கலைக்கப்பட்டு, ஜனாதிபதி ஆட்சிக்குப் பிறகு தான் தேர்தல் வந்தது. பழைய உறுப்பினர்களைக் காலி செய்ய வைத்து, அறைகளைத் தயார் படுத்த அதிகாரிகளுக்கு நேரம் கிடைத்தது. ஆனால் இந்த முறை அப்படியல்ல. சட்டசபை முடிந்து, தேர்தல் வந்து, முடிவுகள் தெரிந்துவிட்டதும் புதிய உறுப்பினர்கள் ஒன்றரை மாதத்தில் வந்து விட்டார்கள். பல அ.தி.மு.க. உறுப்பினர்கள் அறையின் சாவியை எடுத்துக் கொண்டு போய் விட்டபடியால், பூட்டை உடைக்க வேண்டியதாகப் போய்விட்டதாம்!

"ஸீட்டு கிடைக்காத பல அ.தி.மு.க. பெண் எம்.எல்.ஏக்கள் தேர்தல் காலத்தில் இங்கு வந்து தங்கி 'உலகே மாயம்' என்று புலம்பத் தொடங்கியதுதான் மிகுந்த அதிர்ச்சியைக் கொடுத்தது" என்கிறார் கடைநிலை ஊழியர் ஒருவர்.

அண்ணா முதலமைச்சராக இருந்தபோது கட்டப்பட்ட ஹாஸ்டல் இது. மிகவும் பழுதுபட்டுப் போயிருப்பதால், அடிக்கடி செலவு வைக்கிறதாம். இந்தப் புது ஹாஸ்டலைத் தவிர, மவுண்ட் ரோடு அண்ணா சலை அருகில் நூறு அறைகள் கொண்ட இன்னொரு ஹாஸ்டலும் உண்டு. கிசுகிசுக்களில் மாட்ட விரும்பாத உறுப்பினர்களும், தனிமையிலே இனிமை காண விரும்பும் உறுப்பினர்களும், மரங்கள் சூழ்ந்த அந்தப் பழைய ஹாஸ்டலை விரும்புகிறார்கள்.

— தில்லப்பா

படங்கள் : பேஜர் கே. மூர்த்தி

# ஆஹ்..ஹா ஹ்ஹா...



"என் அபிப்பிராயத்தைக் கேட்டீங்கன்னா, சுயேட்சைகளாலதான் நிலையான ஆட்சி தரமுடியும்னு சொல்லுவேன்..."



"வேறொண்ணுமில்லை..... இந்த வட்டாரத்தை அமைதிப் பிரதேசமா அறிவிக்கணும்னு போராடறாங்க... அவ்வளவுதான்..."



"அடுத்து யார் ஆட்சி அமைக்கப் போறாங்கன்னு தெரிஞ்சுக்க நீங்கள் எல்லாம் ஆவலோட நாற்காலி நுனியில் அமர்ந்திருப்பீங்க..."

— இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்.



துணி : இரட்டை இழப்பு!



மன்மோகன்சிங் : சரியான முடிவு!

● வா. க. பாலமுருகன், விழுப்புரம்.

*? ம.தி.மு.க. இனி வளர்ச்சியுறுமா?*

! புலி ஆதரவுக் கொள்கையை விடுத்தால் ஒருவேளை வளரலாம். அ.தி.மு.க. அடியோடு சரிந்து கிடக்கும் நிலையில் ஒரு நல்ல எதிர்க்கட்சியாக உருவாக வாய்ப்பு உண்டு.

● ஆர். ராமசுப்ரமணியன், கோவை.

*? அ.தி.மு.க. தொண்டர்கள் இவ்வளவு அப்பாவிகளாக இருக்கிறார்களே... 'கட்சியைக் காப்பாத்துங்கம்மா' என்று இன்னும் ஜெயலலிதாவைப் போய்க் கேட்கிறார்களே?*

! நேரடியாச் சொல்ல தைரியம் வரலை. அதான், மறைமுகமாச் சொல்றாங்க... புரியலை?... அதாவது, சசிகலாவை விட்டுடுங்கம்மான்னு சொல்றாங்க. எஸ்.டி.எஸ்ஸே வெளிப்படையாக இதை இப்ப சொல்ல ஆரம்பிச்சிருக்காரே...

● வி. சத்தியப்பிரியன்,
சென்னை - 15.

*? தமிழக மக்களால் நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு நல்லாட்சியைத் தர யாரால் முடியும்...?*

! அவர்கள் இன்று உயிரோடு இல்லையே!

● எஸ். அருள்மொழி, காட்டூர்.

*? ரஜினிக்கு, சில நிபந்தனைகளுடன் தரப்பட்ட முக்கியத்துவமா...? அந்த சில நிபந்தனைகள் என்ன சார்...? புரியவில்லையே...?*

! ஆட்சியில், அரசியலில் நேரடியாக இறங்காமல், வெளியிலிருந்து நடுநிலையோடு விமர்சிக்க வேண்டும் என்ற நிபந்தனை.

● பி. உதயகுமார்,
சென்னை - 2.

*? கவுண்டமணி வீட்டில் ஒரு கோடி ரூபாய் கறுப்புப் பணம் சிக்கியது குறித்து...?*

! ஒரு பக்கம் ஊதிய உயர்வு கேட்டு சினிமா உலகின் அடிமட்ட ஊழியர்கள் போராட்டம். மறுபக்கம் ஐ.டி. ரெய்டு பற்றிய தகவல்! கோடிக் கணக்கில் பணம் புரள்கிற

# ரஜினிக்கு என்ன சார் நிபந்தனைகள்...?

● அ. ஷண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.

*? நிர்ப்பந்தத்தால் வழங்கப்பட்ட (கௌரவ) டாக்டர் பட்டத்தைப் பின்னர் திரும்பப் பெறும் அதிகாரம் பல்கலைக் கழகங்களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்று ஒரு முன்னாள் துணைவேந்தர் கூறியுள்ள யோசனை குறித்து...?*

! முதுகெலும்பு இருந்து, வளைந்து கொடுக்காமலிருந்தால் யாரால் இவர்களை நிர்ப்பந்திக்க முடியும்...!

● ஜி. கதிரேசன், சிறுமுகை.

*? மூன்றாவது அணியின் கூட்டு நிலைக்காது என்று ராமகிருஷ்ண ஹெக்டே சொல்லியிருப்பது, அவர் சார்ந்துள்ள ஜனதா தளக் கட்சியின் கட்டுப்பாட்டை மீறியதாகாதா...?*

! 'கட்டுப்பாடு மீறல்தான்! அதற்காக வேண்டுமானால் என் பேரில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கட்டும்...' என்று ஹெக்டேவே சொல்லியிருக்கிறாரே. ஐக்கிய முன்னணிக்கு எவ்வளவு சுபமான ஆரம்பம் பாருங்கள்!

● தி. மகாராசன், சின்னமனூர்.

*? முன்னாள் மத்திய அமைச்சர் மன்மோஹன் சிங், தமக்கு வழங்கப்படவிருந்த '1996 ஆம் ஆண்டின் நாணயமிக்க மனிதர்' என்ற விருதுடன் கூடிய ஐந்து லட்சம் ரூபாயை வாங்க மறுத்துள்ளாரே...?*

! மிகச் சரியான முடிவு! நாணயத்துக்குப் பரிசு கொடுப்பதென்பது கேவலம். சாப்பிடவும் தூங்கவும் பரிசு கொடுக்கிற மாதிரி. பொது வாழ்வில் நாணயமாய் இருப்பதே ஆச்சரியம் என்னும் அளவுக்கு நிலைமை சீரழிந்திருக்கிறது!



சித்து : குட்பை! குட்பை!



ரஜினி : என்ன நிபந்தனைகள்?

தொழிலில் ஊழலெல்லாம் சர்வசாதாரணம். நடிகர்களுக்கெல்லாம் ஒரு குறிப்பிட்ட தொகைக்கு மேல் தருவதில்லை என்று உச்ச வரம்பு நிர்ணயித்து, உறுதியாகச் செயல்பட தயாரிப்பாளர்கள் சங்கம் முடிவெடுக்க வேண்டும். இல்லாவிட்டால், இதே நிலைதான் தொடரும்.

● மு. முத்துவெங்கிட ஆனந்தன், வந்தவாசி.

*? இந்திய கிரிக்கெட் வீரர்கள் ஒழுங்காக விளையாடாவிட்டால் கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்கிறாரே சந்தீப் பட்டீல்?*

! மானேஜர் ஆகப்பட்டவர் கடும் நடவடிக்கை எடுப்பதற்காக மட்டுமே நியமிக்கப்படுவதில்லை. அணியினரை ஊக்குவித்து அவர்களுடைய ஆற்றலைப் பிரகாசிக்கச் செய்யும் பொறுப்பும் மானேஜருக்கு உண்டு. அதைச் செய்யாமல், நடவடிக்கை மட்டும் எடுக்கும் போது சித்து மாதிரி மனம் புண்பட்டு வெளியேறுவது தவிர்க்க முடியாததாகிறது. அப்புறம் 'லபோ திபோ'வென்று அடித்துக் கொண்டு என்ன பயன்...? கோப்பை, சித்து இரண்டுக்கும் சேர்த்து 'குட்பை'தான்!




● ஆர். கர்ணன், தனக்கர்குளம்.

*? உலக அரங்கில் தற்போது இந்தியாவின் பலம் என்ன...? பலவீனம் என்ன...?*

! பலம் - மன்மோகன்சிங். பலவீனம் - தற்போது அவர் இல்லாதது.

● ஏ. அருணாசலம், கும்பகோணம்.

*? ஜே! ஜே! என்று இருந்த ஜெ ஜெ இப்பொழுது எப்படி இருக்கிறார்?*

! எக்ஸ்பிரஸ் பேட்டிக்கு முன் 'த்சொ த்சொ...' என்று... எக்ஸ்பிரஸ் பேட்டிக்குப் பின் 'சே! சே!' என்று!

● முகவை முத்துசாமி, தொண்டி.

*? இனி இந்தியாவின் எதிர்காலம் எப்படி இருக்கும்...?*

! எப்போதும் போலத்தான் - தூரத்தில் ஒளிமயமாக...

● கே. கண்ணன், கோவை புதூர்.

*? சட்டமன்றம் எப்படி நடைபெற வேண்டும் என்பதை ஜெயலலிதா தினமும் சட்டமன்றத்துக்குப் பார்வையாளராகச் சென்று பார்த்துத் தெரிந்து கொள்ள முன்வருவாரா...?*

! இதுவரை தெரியாமலா இருந்தார்...! தெரிந்தும்தான் அப்படி நடந்து கொண்டார்; அதற்குத்தான் தோல்வி எனும் தண்டனை.

● வீ. முத்தையா, திருநெல்வேலி. ☐

*? சில தலைவர்கள் இரு தொகுதிகளில் போட்டியிட்டு, வென்று, ஒரு தொகுதியின் பதவியை ராஜினாமா செய்கிறார்கள். இதனால் அத்தொகுதியில் மறு தேர்தல் நடத்தப்படுகிறது. அதற்கு ஏகமாக செலவு. அந்த செலவை அந்த வேட்பாளரிடமே வசூலித்தால் என்ன...?*

! வசூல் செய்யலாம். நியாயம்தான். அல்லது, இரு தொகுதிகளில் போட்டியிட அனுமதிக்கும் தேர்தல் சட்டத்தை மாற்ற வேண்டும்.

● மு. ஜாகிர் உசேன், கோவில்பட்டி.

*? குடை சின்னம் ராசியில்லாத சின்னமாமே...?*

! ராசியாவது, ஒண்ணாவது! வெயிலுக்கும் மழைக்குமான குடை, புயலை எப்படித் தாங்க முடியும்...!

● பா. கார்த்திகேயன், சென்னை - 15.

*? 'தொகுதியை இழந்தாலும் காமராஜர் தொண்டன் என்ற தகுதியை இழக்கவில்லை' என குமரி அனந்தன் பேசியுள்ளாரே...?*

! காமராஜர், மக்களின் உணர்வுகளை மதித்தார். அதனால்தான் எமர்ஜென்ஸி கொண்டு வந்த இந்திராவை எதிர்த்தார். தாம் பதவியில் அமர்த்திய இந்திராவாயிற்றே என்று ஜால்ரா அடிக்கவில்லை. ஆனால் அனந்தன் விஷயம் அப்படியா? மக்கள் உணர்வுகளை மதிக்காத தன் மூலம் தொகுதியை மட்டுமல்ல, காமராஜர் தொண்டன் என்ற தகுதியையும் இழந்து விட்டார்.

● பக்கிரிசாமி, துவாக்குடி.

*? தமிழ் வளர்ச்சிக்கு உதவ கற்றுலா விடுதிகளில் முதல்வர் எழுதிய 'குறளோவியம்', திருக்குறள் உரை புத்தகங்களை வாங்கி வைக்கலாம் என்கிறாரே தமிழ்க் குடிமகன்?*

! கற்றுலா விடுதிகளில் யார் புத்தகம் படிக்கப் போகிறார்கள்...? இதுபோன்ற செயல்களுக்கு அவசியமின்றி, முதல்வரின் புத்தகங்கள் தாமாகவே விற்பனையாகக் கூடியவைதான். அமைச்சர்கள் இவ்வாறு தாறுமாறாகப் பேசி விடுகிறார்கள். முதல்வரோ உதட்டில் புன்னகை; உள்ளத்தில் புண் என்று புலம்ப வேண்டியிருக்கிறது!

> ☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :
> வீ. முத்தையா,
> 35, பாரதியார் தெரு,
> திருநெல்வேலி டவுன் – 627 006.

# "AN F.D. THAT'S A COMFORT IN SICKNESS TOO ?"

"When I put my savings in a Fixed Deposit with Apollo Hospitals, little did I know that more than just my money would be well looked after! Two weeks ago, my daughter got jaundice. We wanted her to be in the best hands, so we took her to Apollo Hospital. Little did I realise that the Fixed Deposit I had made a year ago would turn out to be such a blessing in disguise! We received special attention, expert care, and a 15% discount on the hospital bill!"

"My daughter's recovering fast, we're all happy that things went so smoothly, and my money worked harder than I imagined!"

"Are your savings as safe, hardworking and supportive?"

15% OFF on treatment at Apollo!

## HIGHLIGHTS

- 15% concession on all treatment and diagnostic tests at Apollo Hospitals, subject to a maximum of 10% of the value of the Deposit. Certain exclusions apply.
- This discount coupon is transferable to anyone by the deposit holder.
- Personal Accident Insurance for the first named deposit holder equal to the value of the Deposit.
- Post dated interest warrants, encashable at par, will be sent alongwith the Fixed Deposit Receipt.
- A Choice of monthly or quarterly interest warrants.
- Interest commences from the date of receipt of cheque/draft, subject to realisation.
- Deposits from Non-resident Indians accepted with repatriation rights.
- Minimum amount of Deposit accepted is Rs. 3,000 and thereafter, in multiples of Rs. 1,000. Outstation payments must be made through bank drafts.

**Scheme A – Fixed Deposit**

| Period of Deposit | Rate of Interest per annum | Interest Payment |
|---|---|---|
| One Year | 15.19% | Quarterly |
| Two Years | 15.19% | Quarterly |
| Three Years | 15.19% | Quarterly |
| 1,2,3 Years | 15.00% | Monthly |

**Scheme B – Cumulative Deposit**

| Period of Deposit | Amount payable on maturity of deposit on Rs. 3,000/- | Effective Annual Yield |
|---|---|---|
| One Year | Rs. 3,482 | 16.08% |
| Two Years | Rs. 4,042 | 17.37% |
| Three Years | Rs. 4,692 | 18.80% |

**APOLLO HOSPITALS Enterprise Limited**

**Regd. Office:** 19, Bishop Garden, Raja Annamalaipuram, Madras – 600 028.
**Hospital Complex:** 21, Greams Lane, Greams Road, Madras – 600 006.
**Administrative Office:** Ali Towers, 22 Greams Road, Madras – 600 006. Phone: 8266956, 8272026, 8255753

Adgraph/AP/596

ஒரு கோடியை இழந்த சோகத்தில் கவுண்டமணி செந்திலைப் பார்த்து ஆறுதல் பெறச் செல்ல, செந்திலோ தனக்குத் தானே பேசியபடி இருக்கிறார்:

''நல்லா வேணும் கவுண்டமணிக்கு! இனிமே எல்லாரும் கறுப்புமணி, கறுப்பு மணின்னு கூப்பிடப்போறாங்க...''



''ஏண்டா நாயே, நான் பிளாக் மணின்னா நீ ஒயிட் மணியா? உனக்கும்தான்டா பத்து லட்சம் போச்சு?''

''அதப் பத்தி பரவாயில் லேண்ணே... நீங்க உதைக்கற உதைக்கு ஒத்தடம்தர ஆகற செலவு! நீங்கதான் பாவம்!'' என்று செந்தில் நழுவ,

''நழுவாதடா நட்டுவாக்கிளித் தலையா... என்னைப் பார்த்தா கறுப்பு மணின்னு சொன்னே.... உன்ன....''

''அட என்னண்ணே இதைப் போயி பெரிசு படுத்திக்கிட்டு.... நட்டுவாக்கிளின்னதும்தான் ஞாபகம் வருது... அந்தக் கிளி, அதான் ரம்பா, அது கூட ரொம்பப் பாவம்ணே...''

''மூஞ்சூருத் தலையா! முடி குறைச்சலா இருந்தாலும் மூளை நிறைய இருக்குடா உனக்கு, நான் வரேன்...'' கவுண்டமணி ரம்பாவைப் பார்க்க அம்பாகக் கிளம்புகிறார்.

# உள்ளத்தை அள்ளித்தா!

ஷூட்டிங் ஸ்பாட்டில் கவுண்டமணி ரம்பாவைப் பார்க்க, 25 லட்சம் போன சோகத்தில் ரம்பா, ''மணி... மணி...'' என்று அழுது கொண்டிருக்கிறார்.

''ஏதுடா நாம இவ்ளோ நாள் நடிச்சு ஒரு கோடிதான் ஏமாத்தியிருக்கோம். இந்தப் பொண்ணு நாலுபடம் கூட முடிக்கலை... அதுக்குள்ள 25 லட்சம் பதுக்கியிருக்கே, சே! என்ன ஒரு அவமானம்'' என்று மனம் குமுறி கவுண்டமணியும் சேர்ந்து அழத் தொடங்குகிறார்.

''மணி அண்ணே, உள்ளத்தை அள்ளித்தா, உள்ளத்தை அள்ளித்தான்னு ரசிகர்கள் கேட்டாங்க. நானும் அள்ளி அள்ளிக் குடுத்தேன். ஆனா இவங்க உள்ளதை அள்ளி எடுத்துக்கிறு போயிட்டாங்களே!'' என்று ரம்பா புலம்ப...

''அம்மா ஷாட் ரெடி....''

ரம்பா சோகமாய் நிற்க, அதிகாரியாக நடிப்பவர் கேட்கிறார்: ''வருமான வரி கட்டாம ஏமாத்த நினைக்கிறீங்களா?''

ஆவேசம் வந்த கவுண்டமணி ஷூட்டிங் என்பதையும் மறந்து,

''டாய், நீ என்ன எங்களோடு ஷூட்டிங் வந்தாயா, மேக்கப் போட்டாயா, வசனம் பேசினாயா, அல்லது களைத்துப் போன எங்களுக்கு காப்பி வாங்கிக் கொடுத்தாயா? நீ என்ன முறை மாமனா, என் ஆசை மச்சானா? எதற்குக் கேட்கிறாய் வரி? யாரைக் கேட்கிறாய் திரை?'' என்று நடுவில் புகுந்து கலக்க,

''சூப்பர் ஷாட்!'' என்றார் டைரக்டர்.

விரைவில் வரவிருக்கும் ''உள்ளதை அள்ளித்தா'' திரைப் படத்தை வெள்ளித் திரையில் காண்க.

கற்பனை : **என்.எம். கிருஷ்ணா**

# பாலம்

●● ஏற்கெனவே என்னிடம் ஒரு காது கருவி உள்ளதால், தற்போது புதிதாகக் கிடைத்துள்ள ஜப்பானிய தயாரிப்பான LION HEARING AID தேவையுள்ளவர்களுக்குத் தரத் தயாராயிருக்கிறேன்.

*எஸ்.சங்கரநாராயணன்,*
*ஆனந்த் பில்டர்ஸ்,*
*14, சீமான் சீனிவாசன் தெரு,*
*சென்னை. 600 018.*

●● "நாளைய நாள் உனது" என்ற தலைப்பில் நான் எழுதிய சிறுகதை ஒன்று "மலர் மல்லிகை" பத்திரிகையில் வெளியாகியுள்ளது அந்த இதழ் யாரிடமேனும் இருக்குமானால் அனுப்ப உதவவும்.

*சியாமளா நாராயண்,*
**2954, 13th B Main,**
**Athiguppe, R.P.C.Layout,**
**Vijaya Nagar II Stage,**
**BANGALORE - 560 040**



●● வீட்டிலிருந்தபடியே வருவாய் பெறக் கூடிய சிறு தொழில்கள் பற்றி அஞ்சல் வழி பயிற்சி இலவசமாகப் பெற எழுதவும்.

*எஸ்.ஆர்.லக்ஷ்மிநாராயணன்,*
*32/A, மேல அடையவளஞ்சான் தெரு,*
*ஸ்ரீரங்கம் - 620 006.*

●● ஓர் ஆய்வுக் கட்டுரைக்காக சுதந்திரப் போராட்டக் கால நிகழ்ச்சிகள் பற்றிய புத்தகங்கள் தேவைப்படுகின்றன. தொடர்பு கொள்ளவும்.

*எம்.மலர்விழி,*
*3, தர்மராஜா கோவில் வீதி,*
*குனியமுத்தூர்,*
*கோயமுத்தூர்-641 008.*

●● HERB ALPERT'S TIJUANA BRASS குழுவினரின் இசைத்தட்டு வைத்திருப்பவர்கள் உடன் தொடர்பு கொள்க. குறிப்பாக WHIPPED CREAM & OTHER DELIGHTS என்ற தலைப்பில் வெளியான இசைத்தட்டு தேவை.

*எஸ்.டி.நாகேந்திரன்,*
*27,குமரன் தெரு,*
*விருதுநகர்- 626 001.*

●● வால்மீகி ராமாயணம், ஸ்ரீகோவிந்த ராஜீயர் வியாக்யானம், கிரந்தப் பதிப்பு- 1881-ம் ஆண்டு பதிப்பு. தேவையுள்ளோர் தெரிவிக்கவும்.

*எஸ்.ராமஸ்வாமி,*
*41/13, சிங்கராச்சாரி தெரு,*
*சென்னை- 600 005.*

●● Solar Heater மற்றும் Interior Decoration பற்றி அறிய விரும்புகிறேன். நூல்கள், ஆலோசனைகள், செயல்முறை விளக்கங்கள் கொடுத்து உதவ வேண்டுகிறேன்.

*எஸ்.ராமநாதன்,*
*3, முக்தி விநாயகர் கோயில் தெரு,*
*மடப்புரம்,*
*திருவாரூர் - 610 002.*

●● என் தந்தை தமிழ்வாணன் எழுதிய (1)பம்பாய் கண்ணன், (2)நடு இரவில், (3) இரத்தப்பசி, (4) ஓடாதே ஆகிய நூல்கள் மறுபதிப்புக்காகத் தேவைப்படுகின்றன. தக்க சன்மானம் அளிக்கவும் விருப்பம்.

*ரவி தமிழ்வாணன்,*
*மணிமேகலை பிரசுரம்,*
*தபால் பெட்டி எண். 1447,*
*சென்னை- 600 017.*

●● நுகர்வோர் பாதுகாப்புக்காக வழங்கிடவும் இலவச ஆலோசனை வழங்கவும் கோவையைச் சேர்ந்த சேவை மனப்பான்மையுள்ள வழக்கறிஞர்கள் தொடர்பு கொள்ளவும்.

*எஸ்.சண்முகசுந்தரம்,*
*136, அளகேசன் சாலை,*
*சாயிபாபா மிஷன் அஞ்சல்,*
*கோயமுத்தூர் - 641 011.*

●● புதுக்கோட்டை கோபாலகிருஷ்ண பாகவதரின் பஜனை புத்தகம் கிடைக்குமானால் தெரிவிக்கவும். நன்றி.

*டாக்டர் எஸ்.சாந்தா,*
*32, சத்யநாராயணா கோயில் தெரு,*
*அல்ஸூர், பெங்களூர் - 560008.*

●● கோயமுத்தூர் இளைஞர்கள் இருவர் வெளிநாட்டுக் காமிராக்களைப் பழுது பார்ப்பதாக ஒரு பத்திரிகையில் படித்த ஞாபகம். அவர்கள் விலாசம் தேவை.

*ஆர்.ரத்னவேல்,*
*12-K, கூட்டுறவு நகர்,*
*துறையூர் - 621 010*

*(பாலம் மூலம் தொடர்பு கொள்ளும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்கு கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது.)*




# யூடிஐ அறிமுகம் செய்யும் ஈக்விட்டி ஆப்பர்சூனிட்டி ஃபண்டு. நீங்கள் பொன்னான வாய்ப்பை நழுவ விடாதிருக்க உறுதிசெய்கிறது இந்த உன்னதமான முதலீட்டு வாய்ப்பு.

வாய்ப்புகள் உங்களைத் தேடி வரும் போது, அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள நீங்கள் தயாராக இருக்க வேண்டும். தற்போது ஸ்டாக் மார்க்கெட் உங்களுக்கு அதுபோன்ற வாய்ப்பை அளிக்கிறது. அதனால் தான் யூடிஐ இப்போது ஈக்விட்டி ஆப்பர்சுனிட்டிஃபண்டை வழங்குகிறது. யூடிஐ ஈக்விட்டி ஆப்பர்சுனிட்டிஃபண்டு யூடிஐ-ன் விரிவான நிதி நிர்வாக வல்லமையின் நன்மைகளைத் தரும். அதை கடந்த காலத்தில் அதன் அநேக ஈக்விட்டி சம்பந்த திட்டங்கள் மும்பை சென்செக்ஸில் வெற்றி கண்டுள்ளன என்பது உறுதிசெய்கின்றன. இந்த ஃபண்டு ஐந்து ஆண்டு க்ளோஸ் எண்டெட் வளர்ச்சி ஃபண்டாகும். இது மே 16,96 முதல் ஜூன் 29,96 வரை விற்பனையாகும்.

## UTI EQUITY OPPORTUNITY FUND

நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் ரூ. 10-ன் முக மதிப்பில் குறைந்த பட்சம் 200 யூனிட்களை வாங்க வேண்டியதுதான். அதிகபட்ச வரையறை இல்லை. இந்த ஃபண்டு நேஷனல் மற்றும் மும்பை ஸ்டாக் எக்சேஞ்சுகளில் லிஸ்ட் செய்யப்படும். அதோடு 3 ஆண்டுகளுக்குப் பிறகு NAV அடிப்படை திருப்பி வாங்கும் விலையில் திரும்ப வாங்கிக்கொள்ளும் வசதியும் உள்ளது. யூடிஐ ஈக்விட்டி ஆப்பர்சுனிட்டிஃபண்டு. இது உங்கள் சிறந்த எதிர்காலத்திற்கு யூடிஐ தயாரிக்கும் வழி ஆகும். இந்த வாய்ப்பை நழுவ விடாதீர்கள்.



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

உங்கள் மேலான எதிர்காலத்திற்கு

ரிஸ்க் அம்சங்கள் : எல்லா மியூச்சுவல்ஃபண்டுகள் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யும் முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்பட்டவையாகும். மற்றும் செக்யூரிட்டிகள் மார்க்கெட்டை பாதிக்கும் அம்சங்கள் மற்றும் சக்திகளைப் பொறுத்து திட்டங்களின் NAV ஏறிடவும் இறங்கிடவும் செய்யும். கடந்தகால சாதனை வருங்கால முடிவுகளைச் சுட்டிக் காட்டுவதாகாது. ஃபண்டின் குறிக்கோள்கள் நிறைவேற்றப்படும் என்பதற்கு உறுதியளிக்க முடியாது. முதலீடு செய்யுமுன் ஆஃபர் பத்திரத்தைப் படிக்கவும்.

**விண்ணப்ப பாரங்கள் ஏற்றுக்கொள்ளப்படும் இடம்: அனைத்து யூடிஐ அலுவலகங்கள். மற்றும் முக்கிய பிரதிநிதிகள் கலெக்ஷன் மையங்கள்.**

**மேலும் விவரங்களுக்கும், விளக்கங்களுக்கும் ஏஜென்டுகள், முக்கிய பிரதிநிதிகள், யூடிஐ அலுவலகங்களுடன் தொடர்பு கொள்ளவும்.**

CWPL/UTIV TAM/ 1029/ 96

# சுஜாதா பக்கம்



சினிமா பற்றிய சிறந்த எழுத்துக்கு மத்திய சர்க்கார் திரைவிழா இயக்குனர் அலுவலகம் மூலம் முப்பதாயிரம் ரூபாய் பரிசும் தங்க மெடலும் கொடுக்கிறார்கள். இந்திய மொழிகள் அனைத்துக்கும் பொதுவான இப் பரிசுக்கு உரிய புத்தகங்களையும் கட்டுரைகளையும் பரிசீலிக்க நடுவர்களில் ஒருவனாக டில்லி சென்றிருந்தேன். திருமதி அருணா வாசுதேவ் எங்கள் தலைவி. பம்பாயைச் சேர்ந்த மாதுரி பத்திரிகை நின்றபின் தற்போது சோனி கார்ப்பரேஷனில் பணி புரியும் திவாரி சக மெம்பர்.

பரிசு, மராத்தி சினிமாவின் சரித்திரத்தை நல்ல படங்களுடனும் நேர்த்தியான அச்சமைப்புடனும் சுவாரஸ்யமான உரைநடையில் சொன்ன ஒரு ஆங்கிலப் புத்தகத்துக்குக் கொடுத்தோம். இந்தப் புத்தகத்திற்கு மகாராஷ்டிர அரசின் திரைப்பட வளர்ச்சிக் கழகம் உதவித் தொகை கொடுத்திருக்கிறது. சினிமா பற்றிய கட்டுரைக்கான பரிசு, மலையாளத்திலும் ஆங்கிலத்திலும் உலக சினிமா - மலையாள சினிமாவின் வளர்ச்சி பற்றிய ஆழ்ந்த விமர்சனங்கள் எழுதும் திரு ராஜ நாராயணனுக்குக் கொடுத்தோம். சிதானந்த தாஸ் குப்தா, ஃபெரோஸ் ரங்கூன்வாலா போன்றவர்களுக்கு (பால்கே அவார்டு போல) வாழ்நாள் சாதனைப் பரிசு ஒன்று நிறுவிக் கொடுக்குமாறு பரிந்துரைத்தோம்.

தமிழில் சினிமா எடுப்பது எப்படி என்று அதன் தொழில் நுணுக்கங்களைப் பற்றி திரு சுப்பாராவ் எழுதிய புத்தகம் சிலாகித்துப் பேசப்பட்டது.

இருந்தும் தமிழில் மலையாளம், பெங்காலி ஏன், அஸ்ஸாமிய மொழிகளில் போல சினிமா பற்றிய ஆழ்ந்த கட்டுரைகள் அந்த அளவுக்கு இல்லை. புத்தகங்களும் இல்லை. அவர்கள் எல்லாம் டிசிக்கா, ரே, ப்ரெஞ்சு புதிய அலை, மார்ட்டின் ஸ்கோர்சிஸி, குரஸோவா, கொரிய சினிமா பற்றியெல்லாம் புத்தகங்கள் எழுதிக் கொண்டிருக்க, நாம் நக்மாவின் வரவால் சுகன்யா பாதிக்கப்பட்டாரா என்று ஆராய்ச்சிக் கட்டுரைகள் வரைந்து கொண்டிருக்கிறோம். தீவிர விமர்சனக் கட்டுரைகள் தமிழில் இல்லாதது பெரும் குறைதான். இந்தப் பரிசு நல்ல புத்தகங்களை வா வா என்று கெஞ்சுகிறது. ஸ்னேகா, க்ரியா, போன்ற பதிப்பகங்கள் சினிமா பற்றிய தீவிரமான புத்தகங்கள் வெளியிட்டால் அடுத்தமுறை என்னை அழைத்தால் சண்டை போட்டுப் பரிசு வாங்கித் தருகிறேன். தமிழில் சினிமா விமர்சனங்கள், கொஞ்சம் கதை சொல்லி இன்னின்னார் நன்னா நடிக்கிறார்கள், இசை இப்படி; இந்தப் பாட்டு நன்றாக இருக்கிறது; படம் ஓடும்; பார்க்கலாம் என்கிற பாணியில் பெரும்பாலும் இருக்கின்றன. சிலர் பள்ளி வாத்தியார் போல மார்க் போடுகிறார்கள். சில விமர்சகர்கள் தம் சொந்த நடையை போட்டுக் காட்டும் சாதனமாகப் பயன்படுத்துகிறார்கள். சிலர் கோழி இறகு, மயில் இறகு, ஓசி டிக்கெட் என்று படம் போட்டுக் காட்டுகிறார்கள்.

நல்ல சினிமா வளர நல்ல விமர்சகர்கள் தேவைப்படுகிறார்கள். நல்ல சினிமா விமர்சனத்துக்குப் பல உதாரணங்கள் உள்ளன. 'டைம்' பத்திரிகையின் விமர்சனங்கள் அவைகளில் ஒன்று. விமர்சனம் சுருக்கமாக இருக்கும். ஒருபத்தி, அல்லது இரண்டு பத்திக்கு மேல் போகாது. டைரக்டரின் பெயர், முக்கிய நடிகர்கள் பெயர், திரைக்கதை எழுதியவர் பெயர் தலைப்பின் அருகிலேயே இருக்கும். டைரக்டரின் இதுவரை படங்களைப் பற்றி அறிமுகம்... அவர் பாணியைப் பற்றி ஒரு அலசல் நிச்சயம் உண்டு. அதன் பின் கதைச் சுருக்கம் சொல்லப்படும். சில நல்லகாட்சிகள் விவரிக்கப்படும். நல்ல நடிப்பும் சுட்டிக் காட்டப்படும். பெரும்பாலும் நல்ல படங்களையே அல்லது வியாபார ரீதியாகப் பெரிசாக பேசப்பட்ட படங்களையே விமர்சனம் செய்வார்கள். மோசமான படங்களைக் கண்டு கொள்ளாமல் விட்டு விடுவதும் ஆரோக்கியமான விஷயம்.

'டைம்' விமர்சனம் செய்கிறது என்றால் படத்தில் ஏதாவது சமாசாரம் இருக்கும் என்று எதிர்பார்க்கலாம். படம் பார்க்காதவர்களுக்கு அந்தப் படத்தைப் பற்றி ஒரு முழுமையான 'ஐடியா' கிடைத்துவிடும்.

நம் விமர்சகர்கள் தமிழ் சினிமாவை மட்டும்தான் விமர்சிக்க வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. மற்ற மொழிப்படங்கள் பற்றியும் எழுத வேண்டும். அந்தப் போட்டியில் அஸ்ஸாமிய மொழியில் பாரதிராஜாவின் வேதம் புதிது படத்தை டீவியில் பார்த்து அறிமுகப்படுத்தி விமர்சனம் எழுதியிருந்த கட்டுரை இருந்தது.

நம்மில் எத்தனை பேருக்கு ஜஹானு பருவாவைத் தெரியும்?

(மீண்டும் அடுத்த வாரம்)



Dr.C.K.M. சபாபதி

# இல்லறமும் நல்லறமே!
# சர்க்கரை வியாதியா? இயலாமையா?
# அல்சரா? ஆஸ்த்மாவா? புற்றுநோயா?
## கவலையே வேண்டாம்!



Dr.C.K.M. குருபரன்

சர்க்கரை வியாதி (எ) நீரிழிவு நோயாளிகள் நடைமுறையில் பயன்படுத்த வேண்டிய மூலிகைகள் பற்றியும், உணவு முறைகள் பற்றியும், அறியும் முன்பு வியாதிக்கான காரணங்களையும், எளிய அறிவியல் உண்மைகளையும் தெரிந்து கொள்வது அவசியமாகும். நீரிழிவு என்பது கணையத்திலிருந்து இன்சுலின் சுரக்காததினால் உண்டாவதாகும். இன்சுலின் சுரப்பது குறைவதற்கான காரணம் என்ன? நாம் உண்ணும் உணவிலிருந்து கணையத்திற்கு கொண்டு செல்லப்பட்ட சக்தியே இன்சுலினாக மாற்றப்பட்டு வெளியாகின்றது. இரத்தமானது சக்தியை கணையத்திற்கு கொண்டு செல்லவும், உற்பத்தியான இன்சுலின் வெளியேறவும் இரத்தக் குழாய்களில் எந்தவித அடைப்பும் இருக்கக் கூடாது. இரத்தக் குழாய்களில் அடைப்பு ஏற்படுவதற்கு காரணம் நாம் உண்ணும் உணவுகளில் கொழுப்புப் பொருட்கள் தேவைக்கு அதிகமாக இருப்பதே காரணம் ஆகும். எனவே இரத்தக் குழாய்களில் ஏற்பட்டுள்ள அடைப்பு நீங்கவும் இனி இதுபோன்ற தடைகள் இரத்தக் குழாய்களில் ஏற்படாமல் இருக்கவும் கொழுப்பு சத்து நிறைந்த ஆகாரங்களை உண்ணுவதை தவிர்க்கவும், குறிப்பாக இறைச்சி உண்பதை தவிர்க்கவும், பழங்கள், பச்சையாக உண்ணக்கூடிய காய்கறிகள் ஆகிய இயற்கை உணவுகளை உண்பதால் ஏற்கனவே படிந்துள்ள கொழுப்புப் பொருட்களால் ஏற்பட்டுள்ள அடைப்புகள் சிறிதுசிறிதாக வெளியேறி இரத்த ஓட்டம் சீரடையும். இதனால் சக்திகள் முறையாக கணையத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு இன்சுலினாக மாற்றமடைந்து வெளியேறும். எனவே நீரிழிவு நோயாளிகள் தங்கள் உடலில் கணையம் முழுவதுமாக பாதிக்கப்பட்டு விட்டதாக நினைத்துக் கொண்டு இனி இன்சுலின் சுரக்காது என்ற பயத்தினை விட்டு விடலாம்.

மேலும் தூய்மையான இரத்த உற்பத்தி, சீரான இரத்த ஓட்டம், முறையான ரத்த சுத்திகரிப்பு ஏற்படுவதால் உடலில் பூரண நோய் எதிர்ப்பு சக்தி ஏற்பட்டு எல்லாவித பிணிகளும் இன்றி மகிழ்ச்சியுடன் வாழ்வது உறுதி!

குறிப்பு: எமது சன் டி.வி. பேட்டியைப் பார்க்கத் தவறியவர்கள், பேட்டியின் விளக்க உரை அடங்கிய ஒலிப்பதிவு கேசட்டை பதிவு அஞ்சல் பார்சலில் பெற ரூ.35/- ஐ கீழ்கண்ட திருப்பத்தூர் முகவரிக்கு M.O. அனுப்புங்கள். கேசட்டை முழுவதும் கேட்ட பின்னர் நேரில் ஆலோசனை பெற வருவது நல்லது.

---

*சென்னை முகவரி:*

**Dr.C.K.M. சபாபதி,**
**S/o. Dr.C.K. மாணிக்கவாசகம்**
115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை
(ரெடிமணி ஷாப் எதிரில் உள்ள சந்தில்)
கெல்லீஸ், சென்னை - 600 010.
போன் : 6424285, 6427638



Dr.C.K.M.

*திருப்பத்தூர் முகவரி:*

ஞானோதய தெய்வீக மூலிகை வைத்தியர்
**Dr.C.K.M. குருபரன்**
**S/o. Dr.C.K.மாணிக்கவாசகம்**
P.B. No: 30, (காலேஜ் எதிரில்)
திருப்பத்தூர் (N.A.A.) 635 601
போன் : 04179-20469, 22329.

---

### வைத்தியரிடம் நேரில் ஆலோசனை/மூலிகைப்பொடி பெற : 1996ம் வருட புதிய முகாம் விவரம்.
### (முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)

| | |
|---|---|
| 2ந் தேதி - வேலூர் (N.A.) | : பிற்பகல் 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா, 16, ஆபீசர்ஸ் லைன், ☏போன் : 0416 / 23060. |
| 3 & 19 ந்தேதி - சென்னை | : காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ☏போன் : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி - கடலூர் (S.A.Dt.) | : காலை 9 to 11 ஆநந்தாஸ் கட்லண்ட்ஸ் ஹோட்டல், ☏போன் : 04142 / 20707. |
| 4-ந் தேதி - விழுப்புரம் | : பிற்பகல் 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில், ☏போன் : 04146 / 22962. |
| 4-ந் தேதி - திருவண்ணாமலை | : மாலை 5 to 6 ராதா லாட்ஜ் பஸ் நிலையம் எதிரில் ☏போன்: 04175 / 22536. |
| 9-ந் தேதி - பெங்களூர் | : காலை 11 to 12.30 ஹோட்டல் பிரசிடென்சி கல்பனா தியேட்டர் அருகில் கெம்பே கவுடா ரோட், ✆ : 2266374. |
| 9-ந் தேதி - ஓசூர் | : மாலை 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், ☏போன் : 04344 / 22899. |
| 9-ந் தேதி - கிருஷ்ணகிரி | : மாலை 5 to 6 அமராவதி லாட்ஜ், ☏போன் : 04343 / 22120. |
| 12-ந் தேதி - சேலம் | : காலை 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில், ☏போன் : 0427 / 449333. |
| 12-ந் தேதி - ஈரோடு | : மாலை 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்போர்டு, பஸ் நிலையம் எதிரில், ☏போன் : 0424 / 70761. |
| 13-ந் தேதி - கோயம்புத்தூர் | : காலை 9.30 to 12.30 கேசினோ பேலஸ் லாட்ஜ் (சாந்தி தியேட்டர் பின்புறம்) ☏போன் : 0422 / 302210, 302220 |
| 14-ந் தேதி - மதுரை | : காலை 9 to 11 ஹோட்டல் கிரவுண்ட்ஸ் சென்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு, ✆ 0452 / 543940. |
| 14-ந் தேதி - தஞ்சாவூர் | : மாலை 5 to 6 அசோகா லாட்ஜ், ☏போன் : 04362 / 20071. |
| 15-ந் தேதி - திருச்சி | : காலை 9 to 11 ஹோட்டல் ஆனந்த், சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில், ☏போன்: 0431 / 460545. |
| 15-ந் தேதி - நாமக்கல் | : பிற்பகல் 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, ☏போன் : 04286 / 21336. |
| 18-ந் தேதி - ஆம்பூர் | : காலை 10 to 11 சம்பத்தி லாட்ஜ், ☏போன்: 04176 / 43311. |
| 18-ந் தேதி - காஞ்சிபுரம் | : மாலை 4 to 5 ராஜம் லாட்ஜ், பஸ் நிலையம் அருகில் 9, காமராஜர் தெரு, ☏போன் : 04112 / 22519. |
| 19-ந் தேதி - சென்னை | : காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ☏போன் : 044 / 6424285, 6427638. |
| 22-ந் தேதி - தர்மபுரி | : காலை 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், ☏போன்: 04342 / 60226. |
| 22-ந் தேதி - திருப்பூர் | : பிற்பகல் 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ், ☏போன் : 0421 / 740418. |
| 22-ந் தேதி - உளுந்தூர்பேட்டை | : மாலை 6 to 7 குறிஞ்சி லாட்ஜ், பஸ் நிலையம் எதிரில் ☏போன்: 04252 / 24353. |
| 23-ந் தேதி - திண்டுக்கல் | : காலை 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, பஸ் நிலையம் பின்புறம் ☏போன்: 0451 / 31206, 27017. |
| 23-ந் தேதி - தூத்துக்குடி | : மாலை 5 to 6 ஹோட்டல் ஆல்வின், தேவர் புரம் ரோடு, ☏போன் : 0461 / 22780. |
| 24-ந் தேதி - திருநெல்வேலி | : காலை 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சித்தார்த், மதுரை ரோடு, ☏போன் : 0462 / 23312. |
| 24-ந் தேதி - நாகர்கோவில் | : பிற்பகல் 2 to 3 ஹோட்டல் சரவணா, மீனாட்சிபுரம், ☏போன்: 04652 / 25689. |
| 25-ந் தேதி - விருதுநகர் | : காலை 9 to 10 ஆண்டவர் லாட்ஜ், மதுரை ரோடு, ☏போன் : 04562 / 45537. |
| 25-ந் தேதி - கரூர் | : பிற்பகல், 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவகர் பஜார், ☏போன் : 04324 / 22663, 23763. |

"திருமயிலைக் கற்பகமே நின்தாள் கண்டேன்...
தீய பிறவிக் கடலைக் காண்கிலேனே"

என்று நெஞ்சுருகிப் பாடினார் கிருபானந்த வாரியார். அந்தக் கற்பகம் உறையும் கபாலீசுவரர் ஆலயத்துக்கு ஜூன் ஆறாம் தேதி குடமுழுக்கு.

மயிலை கபாலீசுவரர் ஆலயம் மிகப் புராதனமானது; பெருமை வாய்ந்தது. ஒரு காலத்தில் எழில் மிகு சோலையாகவும் பசுமை சூழ் வனமாகவும் மயிலாப்பூர் இருந்திருக்கிறது என்றால்

# இடம் பெயர்ந்த இறைவன்!



• கபாலீசுவரர் (உற்சவர்)

நாதசுரக்காரர்கள் கொட்டி மேளம் கொட்டுவதற்கு பதில் பெண்கள் சங்கு ஊதுவது வங்காளத்து வழக்கம்.

– வயலூர் ஆர். பார்த்திபன்

ஒன்றும் செய்யாமல் இருப்பவன் மட்டும் சோம்பேறி அல்ல. இப்போது செய்து கொண்டிருப்பதை விட சிறப்பாகச் செய்யும் திறமை இருந்தும், அப்படிச் செய்யாமல் இருப்பவன் கூட சோம்பேறிதான்!

– சாக்ரடீஸ்

தகவல் : எஸ். எஸ். பூங்கதிர்.

''பணத்தை சேமிக்கும் பழக்கம் நல்லதுதான். ஆனால் அடுத்தவருடைய பணத்தை அல்ல!

–பிரியா பாலு

வயிறு நிறைந்துள்ள போதும் உண்பவன், தன் பற்களாலேயே தனக்கு சவக்குழி தோண்டிக் கொள்கிறான்.

– துருக்கிப் பழமொழி

தகவல் : ஆர். பார்த்திபன்.

நம்ப முடிகிறதா?

'கானமர் சோலைக் கபாலீச்சரம்' என்றும் 'மடல் ஆர்ந்த தெங்கின் மயிலை'என்றும் பாடிப் போகிறார் திருஞான சம்பந்தர்.

ஆரம்பக்காலத்தில் இந்தத் திருக்கோவில், சாந்தோம் கடற்கரையை ஒட்டி அமைந்திருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். கடல் அரிப்பினால் ஆலயம் அழியாதிருக்கும் பொருட்டு, தற்சமயம் இருக்கிற இடத்துக்கு முன்னூறு வருடங்கள் முன்பு மாற்றியிருக்கிறார்கள்.

இறைவனைக் கண்டுபாட வந்த சம்பந்தர், 'ஊர் திரை வேலை உலாவும் உயர் மயிலை' என்று கடற்கரையோரக் கோவிலைக் கண்டு பாடியதாக அமைகிற பாடல் இதற்கு சாட்சியாக இருக்கிறது.

உமையவள் மயில் வடிவம் கொண்டு, தவம் செய்து இறைவனின் அருள்பெற்ற தலம் என்பதாலே 'மயிலை' என்று பெயர் வந்ததாம்!

கபாலீசுவரரின் அருளுக்கு அளவே இல்லை என்பார்கள். அது மெய்தான் என்கிறது இந்த வரலாறு:

பூம்பாவை என்கிற இளம் நங்கையைப் பாம்பு தீண்டி விட்டது. இறந்து விட்ட அவளை எரித்தபின், அஸ்தியை ஒரு குடத்தில் இட்டு, பாதுகாத்து வந்தார் அவள் தந்தை.

மயிலைக்கு வந்த ஞானசம்பந்தப் பெருமான் இதைக் கேள்விப்பட்டு, அந்த அஸ்திக் குடத்தை எடுத்து வரச் சொல்லி, கபாலீசர் சந்நிதி முன் வைத்து ஒரு பதிகம் பாடினார்.

'போதியோ பூம்பாவாய்' என நிறையும் அந்தப் பத்துப் பதிகங்கள் பாடி ஆனதும் சாம்பல் சரீரமாகி, உயிர்பெற்று எழுந்து நின்றாள் பூம்பாவை!

சம்பந்தர் விரும்பியவாறே அவள் கபாலீச்வரர் ஆலயத்திருப்பணியில் தம் மீதி வாழ்நாளைக் கழித்தாள் என்பது வரலாறு!

வள்ளுவர் முதல் பேயாழ்வார், இஸ்லாமியப் பெருங்கவிஞர் குணங்குடி மஸ்தான் சாகிபு எனப்பல ஆன்றோர்கள் வாழ்ந்த பெருமை மிகு தலம் இந்தத் திருமயிலை.

தலத்துக்குப் பெருமை தரும் கபாலீசுவரர் ஆலயத்துக்கு இப்போது கும்பாபிஷேகம் நடப்பது சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நிகழ்ச்சி.

- சுப்ர. பாலன்.

வண்ணப்படம் : உத்ரா.

# KGC காசி சேமிப்புத் திட்டம் KGC

அ) மாதம் ரூ.200/- வீதம் 25 மாதங்களுக்கு செலுத்தி வரவேண்டும். 250 உறுப்பினர்கள் கொண்ட இத்திட்டத்தில் பிரதி மாதம் குலுக்கல் முறையில் ஒரு உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுவர். குலுக்கலில் வெற்றி பெற்ற அதிர்ஷ்டசாலி ரூ.5,500/- மொத்தமாக உடனே பெறலாம் மீத தவணைகளை செலுத்த வேண்டியதில்லை. குலுக்கல் 25 மாதமும் நடைபெறும் வகையில் ஒவ்வொரு மாதமும் ஒரு உறுப்பினர் மட்டும் தேர்ந்தெடுக்கப்படுவர். 25வது மாத முடிவில் குலுக்கலில் தேர்வு பெறாத 225 உறுப்பினர்கள் தலா ரூ.5,500/ மொத்தமாக பெறலாம்.

ஆ) மாதம் ரூ.200/- வீதம் 45 மாதங்களுக்கு செலுத்தி வரவேண்டும். 250 உறுப்பினர்கள் கொண்ட இத்திட்டத்தில் பிரதி மாதம் குலுக்கல் முறையில் ஒரு உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுவர். குலுக்கலில் வெற்றி பெற்ற அதிர்ஷ்டசாலி ரூ.10,000/- மொத்தமாக உடனே பெறலாம் மீத தவணைகளை செலுத்த வேண்டியதில்லை. குலுக்கல் 45 மாதமும் நடைபெறும் வகையில் ஒவ்வொரு மாதமும் ஒரு உறுப்பினர் மட்டும் தேர்ந்தெடுக்கப்படுவர். 45வது மாத முடிவில் குலுக்கலில் தேர்வு பெறாத 225 உறுப்பினர்கள் தலா ரூ.10,000/- மொத்தமாக பெறலாம்.

**எங்களிடம் வைப்பு நிதி செய்பவர்களுக்கு**

**18%** முதல் **27%** வரை வட்டியும்

**1** கிராம் தங்க நாணயம் + **3%** ஊக்கத்தொகை வழங்குகிறோம்

**நான்கு**
பொன்னான சேமிப்பு திட்டங்களில் சேர்ந்து

ரூ **2** இலட்சம் மதிப்புள்ள பரிசுகளை வெல்வீர்!

**குறைந்தபட்ச முதலீடு ரூ.10,000/- அதற்குமேல் ரூ.1000/- மடங்குகளில். தங்க நாணய சிறப்பு சலுகை 10.6.96 வரை மட்டுமே.**

## காசி ரொக்கப் பத்திர திட்டம் :

அ) ரூ.862/-ஐ 12 மாதங்களுக்கு வைப்பு நிதி செய்து 12-வது மாத முடிவில் முடிவில் ரூ.1,000/- மொத்தமாக பெறலாம். ஆ) ரூ.640/-ஐ 36 மாதங்களுக்கு வைப்பு நிதி செய்து 36-வது மாத முடிவில் முடிவில் ரூ.1,000/- மொத்தமாக பெறலாம் இ) ரூ.475/-ஐ 60 மாதங்களுக்கு வைப்பு நிதி செய்து 60-வது மாத முடிவில் முடிவில் ரூ.1,000/- மொத்தமாக பெறலாம். இத்திட்டத்தின்படி குறைந்த முதலீடு செய்து குறுகிய காலத்தில் அதிக லாபம் பெறலாம் இத்திட்டத்தினை தங்களது அன்பளிப்பாளர்களுக்கு பரிசாகவும் அளிக்கலாம்.

## காசி ரெக்கரிங் டெபாஸிட் திட்டம்

| குறைந்தபட்ச தொகை ரூ. | மாதங்கள் | முதிர்வுத் தொகை ரூ. |
|---|---|---|
| 100 | 12 | 1,302/- |
| | 24 | 2,774/- |
| | 36 | 4,568/- |
| | 48 | 6,604/- |
| | 60 | 8,968/- |

## காசி பென்ஷன் திட்டம்

| மாதத் தவணை | வருடங்கள் | முதிர்வுத் தொகை ரூ. | பென்சன் தொகை ரூ. |
|---|---|---|---|
| ரூ.50 | 10 | 13,932/- | 175/- |
| ரூ.100 | 10 | 27,866/- | 350/- |
| ரூ.200 | 10 | 55,731/- | 700/- |
| ரூ.500 | 10 | 1,39,328/- | 1,750/- |
| ரூ.1,000 | 10 | 2,78,657/- | 3,488/- |

KGC **காசி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**
**காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிட்.**

ஞாயிறு அலுவலகம் உண்டு

தலைமை அலுவலகம் : 91-92, ஜவஹர்லால் நேரு சாலை, காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ், அசோக் நகர், சென்னை - 600 083. போன் : 4822208, 4825506, 4821959, 4896409, 4896373 பேக்ஸ் : 044 4825606. கிளைகள் சென்னை : சைதாப்பேட்டை : 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-15. போன் : 456464 மைலாப்பூர் : 140, முதல் மாடி, கதவு எண் 13 சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், ராயப்பேட்டை ஹை ரோடு, மயிலாப்பூர், சென்னை-600 004. திருவான்மியூர் : கதவு எண் 10, சிவம் ஆர்கேடு, எண்-64, எல்.பி.ரோடு, திருவான்மியூர், சென்னை-600 041. அம்பத்தூர் : எண் 11, தட்சிணி ட்ரேடர்ஸ் எம்.டி.எச்.ரோடு, அம்பத்தூர், சென்னை-600 053. போன் : 682592. திருச்சி : 5/B, 25, ஜெனிசி பிளாசா, 5, பாரதியார் சாலை, கன்டோன்மெண்ட், திருச்சி-620 001. போன் : 466003 30B/2, 3வது மாடி, வில்லியம்ஸ் ரோடு, டாப் காம்ப்ளக்ஸ், மூன்றாவது மாடி, கன்டோன்மெண்ட் திருச்சி-1. போன் : 466002 மதுரை : 246A நாயக்கர் புதுத் தெரு, முதல் மாடியில் சக்தி சிவம் தியேட்டர் எதிரில் மதுரை-625 001. போன் : 54190. கோவை : ஓப்லி டவர்ஸ், 59/4, டி.பி. ரோடு, ஆர்.எஸ். புரம், கோயம்புத்தூர்-641 002. போன் : 444656. பெங்களூர் : 33, 2வது மாடி, கார்ப்பரேஷன் நம்பர் 400, ஓவிஸ் காம்ப்ளக்ஸ், சம்பங்கி ரோடு, 6வது குறுக்குத் தெரு அருகில் மல்லேஸ்வரம்-3 போன்: 3363351 1532, 26வது மெயின், 9வது பிளாக், டெலிகாம் பேக்ரி மாடியில், ஜெயநகர், பெங்களூர்-560 041. போன் : 6650480. மைசூர் : 20, முதல் மாடி, தேவராஜ் அர்ஸ் சாலை, மைசூர்-570 001. போன் : 35097 குண்டூர் : 4-8-14 மெயின் ரோடு, கொரிட்டிபாடு, குண்டூர் 522007. போன் : 355257. மும்பாய் : எண் 203A, ஸ்ரீராம் நர்சரி, கீழ்த்தளம் (opp) பவர்கோட்டர்ஸ் சியான் மெயின் ரோடு, சியான் கிழக்கு மும்பாய்-22. போன் : 4079414, 4079466. DUBAI NADA AL ZUHOOR TRADING EST. P.BOX NO. 27957 DUBAI : UAE. TEL : 247970 INTERCODE 00971/40 FAX : 247980





## 23. கோபப் புயல்!

ருத்ராம்பாளின் வருகை, விபரீதத்தைச் சற்று தாமதப்படுத்தியது.

காகதீய மன்னன் அவளை அசல் ஆணாகவே வளர்த்திருந்தான் என்பதை வீரர்களுக்கான உடையும், பாதுகாப்புக்கான மெல்லிய இரும்பு வலையும், இடையிலிருந்து நீண்ட வாளும் நிரூபித்துக் கொண்டிருக்க, அவள் குரல் மீண்டும் உக்கிரமாக ஒலித்தது:

"யாரிவன்? என்ன நடக்கிறது இங்கே?"

பதில் வாலிபனிடமிருந்து வந்தது. "இளவரசியார் மற்றவர்களை சற்று மரியாதையுடன் அழைப்பது நல்லது. மக்களை மதிக்கத் தெரியாத மன்னனோ, அரசோ அதிக நாட்கள் நிலைத்ததில்லை" என்றான் வாலிபன்.

'ருத்ரமகாதேவன்' என்று ஆண் பெயரைப் புனைந்து கொண்டிருந்த ருத்ராம்பாளின் விழிகள் அந்த வாலிபனை ஒருகணம் வெறித்தன.

"ருத்ராம்பாளுக்குப் புத்திமதி கூறுமளவிற்குத் துணிவிருக்கிறதா உனக்கு? யார் நீ?" என்றான் முன்கோபி என்று நிரூபிக்கும் விதமாக.

"யாதவ கிருஷ்ணன்" - என்று தெளிவாக வந்த வாலிபனின்

பதில் இளவரசியை மட்டுமின்றி சுற்றி யிருந்த வீரர்களை யும் வணிகர்களை யும் கூட அதிர்ச்சிக் குள்ளாக்கியதால், அனைவரது விழி களும் அந்த வாலி பனை திகைப் புடன் ஏறிட்டன.

வடக்கே சாளுக்கியரையும் மாளவத்தையும் மட்டு மின்றி வட மேற்கிலிருந்த அரசுகளை அடிபணியச்

# தளுச்

விஷ்வக்சேனன்

செய்தவனும் போசளருக்கும் காகதியருக் கும் பரம விரோதியுமான யாதவப் பேர ரசின் மன்னன் இரண்டாம் ஜெய்துகியின் மகன் யாதவ கிருஷ்ணன்! தன்னந்தனியாக, எந்த முன்னறிவிப்புமின்றி, எதிரிகளின் நாட்டிற்குள் வணிகர்களுடன் வணிகனாக அவன் வரக்கூடும் என் பதை அறவே எதிர்பார்த்திராத ருத்ராம்பாள் சற்று திகைத் துத்தான் போனாள்.

கண நேர சிந்தனை அவன் பயிற்சிக்காகத் தமிழகம் சென்றதை நினைவுபடுத்தியது. அவன் பயிற்சியை முடித்துக் கொண்டு திரும்பிக் கொண்டிருக்கிறான் என்பதையும், திரும்பியதும் இளவரசனாகப் பட்டம் கட்டப்படுவான் என்பதையும், யாதவ மன்னனின் கரம் இன்னும் பலப் பட்டுவிடுமென்பதையும் புரிந்துகொண்டவளின் முகத்தில், விபரீதச் சாயை

ஒன்று படர்ந்தது. அடுத்து ஒலித்த அவள் உத்தரவைக் கேட்டு வீரர்கள் திகைத்தனர்.

"இவனைப் பிடித்துக் கட்டுங்கள்! யாதவ இளவல் சில காலம் காகதீயர் சிறையில் விருந்தினராக இருக்கட்டும்!" என்றாள் ருத்ராம்பாள்.

அந்த உத்தரவைக் கேட்டு யாதவ கிருஷ்ணன் கூச்சலிடுவானென்றோ தப்ப முயல்வானென்றோ எதிர்பார்த்த காகதீய இளவரசி ஏமாந்தே போனாள். சற்று முன்பாக அனல் பறந்த விழிகளுடன் வீரர்களைப் பந்தாடிய அவன் முகம் அசாதாரண அமைதியைக் காட்டியது. அதே பயங்கர அமைதி குரலிலும் ஒலிக்க, அவளைப் பெயரிட்டு ஏக வசனத்தில் அழைத்தவன், "ருத்ரா! ஆண்டவனை சேவிக்க வரும் அடியவர்களிடம் காட்ட வேண்டிய மரியாதையையோ, எதிரியானாலும் வேற்று நாட்டு இளவரசனுக்கு அளிக்க வேண்டிய மதிப்பையோ விடுத்து, தனியாக வந்திருப்பவனை சிறை செய்வது தர்மமல்ல. நான் மேலே சென்று சிங்கவேளை சேவித்துத் திரும்புகிறேன். பிறகு வேண்டுமானால் என்னைச் சிறை செய்து கொள்" என்றான்.

ருத்ராம்பாளின் பதில் வெகு அலட்சியமாக வந்தது: "உனக்குக் காட்ட வேண்டிய மரியாதையை சிறையில் வந்து காட்டுகிறேன்" என்றவள், வீரர்களை நோக்கி, "ஏன் நிற்கிறீர்கள் இன்னும்? அவன் கரங்களைப் பின்புறமாகக் கட்டிப் புரவியில் ஏற்றுங்கள்!" என்றும் உத்தரவிட்டாள்.

'பட்டமேற்குமுன்பாக ஆண்டவனை சேவிக்கும் பாக்கியம் கிட்டாமற் போனாலும், அவன் சன்னிதிக்குச் செல்லும் படிகளில் குருதியைப் படரவிடுவது பாவம்' என்ற எண்ணம் எழுந்ததால் மௌனமாகவே நின்ற யாதவ இளவலின் கரங்கள் கட்டப்பட்டன. புரவியொன்றில் அவன் ஏற்றப்பட்டான். இலேசான வருத்தக் குறி படர்ந்த முகத்துடன் அந்த கருடாசல மலையை நோக்கி தலையைத் தாழ்த்தி பிரார்த்தித்தவன், அவனை அதுவரை அழைத்து வந்த வணிகர்களையும் நோக்கி ஒரு முறை விடைபெறும் பாவனையில் வணங்கினான். அவன் விழிகளில் அந்தக் கூட்டத்திலிருந்த சினத்து முதியவன் மட்டும் தென்படவில்லை.

சுற்றிலும் வந்து கொண்டிருந்த வீரர்களையும், புரவியில் முன்னால் சென்ற ருத்ரமகாதேவியையும், பயணித்த பாதையையும் கவனித்தபடியே வந்தான். சிங்கவேளை சேவிக்க வேண்டுமென்ற அவன் எண்ணம் நிறைவேறாதது குறித்து அவன் மனத்தில் வருத்தமிருக்கவே செய்தது. ஆனால் அதற்கும் தகுந்த காரணம் அந்த வைகுந்தன் அறிந்திருக்க வேண்டும் என்ற நம்பிக்கை அவன் வருத்தத்தை மெள்ளத் துடைக்கவும் செய்தது.

## அருள்வாக்கு

ஒரு விறகுக் கட்டு இருந்து, அதைச் சுற்றிப் போட்ட கயிற்றுக்கட்டு முடிச்சு அவிழ்க்க முடியாமல் ஆனால் என்ன செய்வார்கள் தெரியுமா? கட்டு தளர்வதற்கு முதலில் கட்டிய கயிற்றைவிட இறுக்கமாக அதை இன்னொரு கட்டுப் போட்ட மாதிரி சுற்றி நெருக்கிப் பிடித்துக் கொள்வார்கள். 'கட்டுப் போட்ட மாதிரி' தானே ஒழிய, முடிச்சுப் போட்டுக் கட்டியே விடமாட்டார்கள். இந்த இறுக்கத்தில் முதலில் முடிச்சுப் போட்டுக் கட்டின கட்டு லூஸாகிவிடும். அதை எடுத்துப் போட்டு விடலாம். அப்புறம், கட்டினமாதிரி, ஆனால் கட்டியே விடாமல் சுற்றியிருக்கிற இன்னொரு கயிற்றையும் எடுத்து விட்டால் விறகுகள் கட்டற்று விடுபட்டுவிடும். இதே மாதிரி மனஸின் க்ருத்ரிமத்தில் பல திணுஸான கார்யங்களால் மணி முடிச்சாகக் கட்டுப் போட்டுக் கொண்டு ஸம்ஸார பந்தத்தில் கிடக்கிற நாமும் அதிலிருந்து விடுபட, "சாஸ்த்ர கர்மா" என்று கட்டு மாதிரி உள்ளதைப் போட்டுக் கொள்ள வேண்டும். கன்னாபின்னா கட்டாக

ஆனால் காகதீய இளவரசியின் எண்ணம் வேறு விதமாக இருந்தது. வடக்கே அச்சுறுத்திக் கொண்டிருக்கும் யாதவ மன்னனைப் பணிய வைக்கவே தன்னிடம் யாதவ இளவலைச் சிக்க வைத்திருக்கிறான் அந்த ஆண்டவன் என்று எண்ணினாள் அவள்!

உண்மையின் அந்த வைகுந்தனின் சித்தம் என்னவென்பதை இருவருமே அறிந்திருக்கவில்லை!

பவநாசினி நதியை நோக்கிச் சென்ற பாதையில் நதியை நெருங்க நெருங்க, மரங்கள் அடர்ந்து கொண்டே வருவதை கவனித்த இளவல், தப்பிக்கும் மார்க்கமேதும் தென்படுகிறதா என்று உற்றுக் கவனித்தபடியே வந்தான். சலசலவென்று ஓடிய நதி தன் நிலையைக் கண்டு சிரிப்பதாகவே பட்டது அவனுக்கு. நதியைக் கடப்பதற்கு அமைக்கப்பட்டிருந்த மரப்பாலத்தில் தட்தட்டென்று ஒலியெழும்பச் சென்ற புரவிகள் சட்டென்று நின்றன. இளவரசி நின்றதைக் கவனித்து, குதித்து இறங்கி முன்னால் சென்ற வீரர் தலைவனும் உடன் இறங்கிச் சென்ற வீரர் நால்வரும் கூட எதிரே தெரிந்த காட்சியைக் கண்டு திகைத்தனர்.

பாலத்தை மறுகரையுடன் இணைத்த பலகைகள் நீக்கப்பட்டு, கீழே நதியின் பிரவாகம் அவர்களைக் கண்டு நகைத்தபடியே ஓடிக் கொண்டிருந்தது! பக்கப் பலகைகளும் துண்டிக்கப்பட்டு, ஒரு பக்கத்து அடிக்கட்டையொன்று மட்டும் விளிம்பில் நின்றபடி பாலத்தை ஊசலாட வைத்துக் கொண்டிருந்தது. அதன் நுனியில் கட்டப்பட்டிருந்த



இல்லாமல் சாஸ்த்ர மூலமாக ரிஷிகள் ஒவ்வொருவருக்கும் ஸ்வதர்ம ரூபமாக அநேக கார்யங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ரிஷிகளின் மூலமாக ஈச்வரனே போட்ட ரூல்கள் இவை. நம் ஸ்வந்த ஆசையின் மேலே கன்னாபின்னா என்று காரியங்கள் பண்ணிப் பண்ணி முடிச்சாகப் போட்டுக் கொண்டிருக்கிற கட்டு தளர்வதற்கு, இந்த ஸ்வதர்ம கர்மக் கட்டுதான் உதவி புரிவது. இது அசல் கட்டு அல்ல. கட்டு மாதிரி நெரிக்கும். ஆனாலும் இதிலே நெரிபடுவது நம்முடைய தப்பான ஆசைகள்தான். நம்மை நல்லதில் விடுவிப்பதற்கே இந்த நெரிப்பு. இதைப் புரிந்து கொண்டால் சாஸ்த்ர கர்மாக்களை ரூல்கள் கொஞ்சங்கூடத் தப்பாமல் ஸந்தோஷமாகச் செய்து கொண்டே போகலாம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

நீண்ட கயிறு ஒன்றும் எதிர்க்கரையிலிருந்த பெரும் மரத்தை நோக்கிச் சென்றிருந்தது.

"பாலத்தை இப்படி துண்டித்தது யார்?" உக்கிரமான குரலில் ஒலித்த கேள்வியுடன் புரவியை விட்டு இறங்க முற்பட்டாள் ருத்ரமகாதேவி. அவள் கேள்வி முடியும் முன்னர் காற்றில் விர்விர்ரென்ற ஒலிகள் எழுந்தன. அடுத்த கணம், வீரர் தலைவனும் உடன் வந்து பாலத்தின் விளிம்பில் நின்ற நான்கு வீரர்களும் மார்பில் பாய்ந்த அம்புகளுடன் உருண்டனர்.

எதிர்க்கரையிலிருந்து பலமாக ஒலித்தது ஒரு குரல். "இளவரசி! அப்படியே நில்லுங்கள். அசையும் எவர் உயிரும் அடுத்த வினாடி மேலே பறந்துவிடும்!"

எதிர்க்கரையில் வீரர்கள், குறைந்தது பதின்மராவது இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பில் கனல் கக்கிய விழிகளை உயர்த்திய இளவரசி திகைத்தாள். பெரும் மரமொன்றின் அடியில் ஒரே ஒரு சீனத்து முதியவன் தனித்து நின்றிருந்தான். வெண்பஞ்சு போன்ற தலை முடியும் நீண்ட தாடியும் காற்றில் அலைபாய நின்ற அந்த சீனன் கரத்திலிருந்தது விசித்திரமான ஒரு வில். 'ப' கர வடிவத்திலிருந்த அந்த நீண்ட வில்லில் ஐந்து கணைகள் தெரிந்தன. அந்தக் கணைகளில் கூர்மையான எஃகு முனைகள்! அந்த முனைகளைக் காட்டிலும் கூர்மையாக மீண்டும் ஒலித்தது அவன் குரல். "இளவரசி, இந்த சீனத்து வில் ஒரே சமயத்தில் ஐந்து பேரை அழிக்க வல்லது. உங்கள் அனைவரையும் அழிக்க இதற்கு இன்னும் நான்கு வினாடிகள் போதுமானது. பரீட்சிக்க விரும்பினால் நிற்கும் இடத்தை விட்டு நகரலாம்" என்றான் அந்த முதியவன்.

அதுவரை அப்படியொரு விசித்திரமான ஆயுதத்தைக் கண்டிராத இளவரசி அந்த வில்லை சீனத்து முதியவன் பிடித்திருந்த லாகவத்தையும், பாலத்தில் உருண்டு விழுந்துவிட்ட வீரர்களின் சடலங்களையும் கண்டு அவன் மிரட்டல் வெறும் போலியல்ல என்பதையும் புரிந்து கொண்டாள். பாலத்தின் விளிம்பில் நிற்கும் தானும் தனது வீரர்களும் மரத்தின் மறைவில் நிற்பவனுக்குச் சரியான இலக்கு என்பதை உணர்ந்து, செய்வதறியாது பிரமித்து நின்றாள்.

மீண்டும் ஒலித்தது சீனத்து முதியவனின் குரல்: "யாதவ கிருஷ்ணா! ஏன் மலைத்து நிற்கிறாய்? புரவியை விட்டு இறங்கி வந்துவிடு!" என்றவன், சற்று முன்னால் நகர்ந்து வீரர்களும் இளவரசியும் நேர்ப் பார்வையில் படும்படி நின்றான்.

புரவியின் மீதிருந்து குதித்து இறங்கிய யாதவ இளவல் பாலத்தின் அடிக் கட்டையில் ஒரு கால் பதித்து, ஒரே தாவலில் மறுகரையை அடைந்து முதியவரை நெருங்கினான். வீரர்களையும் இளவரசியையும் விட்டு பார்வையை விலக்காத முதியவரின் உத்தரவு மீண்டும் ஒலித்தது: "யாதவ கிருஷ்ணா, அதோ அந்த மரத்திலிருந்து தொங்கும் கயிற்றைப் பலமாக இழுத்து விடு!" என்று.

முதியவனின் உத்தேசம் இன்னதென்பதைப் புரிந்து கொண்ட யாதவ இளவல், ஒரே பாய்ச்சலில் மரத்தை அடைந்து கட்டுண்ட கரங்களை லாகவமாய்ப் பயன்படுத்தி, கயிற்றைப் பிடித்து பலங்கொண்ட மட்டும் உலுக்கி இழுத்தான். அடுத்த கணம் விளிம்பில் ஊசலாடிக் கொண்டிருந்த பாலத்தின் அடிக்கட்டை விலகி, மரப்பாலம் மளமளவென்ற ஓசையுடன் அதில் நிற்பவர்களையும் சேர்த்துக் கொண்டு நதியை நோக்கி இறங்கியது. புரவிகளின் கனைப்பொலிகளும் வீரர்களின் கூக்குரல்களும் சேர்ந்து ஒலித்தன.

யாதவ இளவலின் கட்டுக்களைக் குறுவாளால் அறுத்து எறிந்த முதியவன், மரங்களின் மறைவிலிருந்த புரவிகளை நோக்கி நடந்தான். அந்த சீனத்து வில்லை இரண்டு பக்கங்களிலும் மடக்கி நீண்ட துணிப்பைக்குள் அடைத்து, புரவியொன்றின் பக்கவாட்டில் தொங்க விட்டான். பாதையை விடுத்து பக்கங்களில் தெரிந்த மரக்கூட்டங்களினூடே நேர் வடக்கில் புரவியைப் பாய விட்டான். தொடர்ந்து சென்ற யாதவ இளவல் தூரத்தே தெரிந்த அடர்ந்த வனத்தைக் கண்டு இனி இளவரசியும் அவன் வீரர்களும் நதியிலிருந்து வெளியேறி வந்தாலும் தங்களைப் பிடிப்பது குதிரைக் கொம்புதான்



"வெயில் தாங்கமாட்டாம நிறைய கூல் டிரிங்க்ஸ் குடிச்சேன் டாக்டர்!"

— கிச்சா

என்பதைப் புரிந்து கொண்டான்.

தன்னந்தனியே வந்து அந்த விசித்திரமான சீனத்து வில்லின் உதவியோடு தன்னை எளிதாக மீட்ட அந்த சீனத்து முதியவர் நிச்சயம் அசாதாரணமான வீரர் என்பதையும் அவர் தோற்றமும் கூட ஒரு வேடமாகவே இருக்க வேண்டும் என்பதையும் யூகித்த இளவல், புரவியை அவருக்கு நெருக்கமாகச் செல்லவிட்டபடியே, "சீனத்து முதியவரே, தாங்கள் யார்?" என்று வினவினான்.

அந்த சீனத்து முதியவனின் பதில் நிதானமாக வந்தது. "உனது ஆசான் ஆரியச் சக்கரவர்த்தி கிருஷ்ணமல்லரின் நெருங்கிய நண்பன். பெயர் யாங்கின்..." என்று.

யாதவ இளவல் பிரமித்தான். அந்தப் பெயரைப் பலமுறை பாண்டிய நாட்டிலிருந்த போதே கேட்டிருந்தான். ஓரிருமுறை பார்த்தும் கூட இருக்கிறான். தான் பார்த்திருந்த அந்த மனிதருக்கும் தற்போது எதிரில் அனாயாசமாகப் புரவியிலமர்ந்து முதியவன் கோலத்தில் சென்று கொண்டிருந்த மனிதனுக்கும் சம்பந்தமேயில்லாதது போலத் தோன்றினாலும் மெள்ள மெள்ள நினைவு படுத்திக் கொண்டவனுக்குப் பல ஒற்றுமைகள் புலப்பட்டன.

"தாங்கள் போசள சிங்கணனிடம் சிறைப்பட்டிருந்ததாக..."

"ஆம். உண்மைதான். ஆனால் மாறன் அமுதனார் உத்தரவின்படி அங்கிருந்து வெளியேறியது முதல் உன் தந்தை யாதவ மன்னரிடம் சென்று சேர்ந்தேன். பயிற்சி முடிந்து நீ திரும்புவதையும், சிங்கவேளை சேவித்துவிட்டு நீ வரப் போவதையும் கூறி உன்னைப் பாதுகாத்து அழைத்து வரவும் பணித்தார் உன் தந்தை" என்றார் யாங்கின்.

யாங்கின் கூறிய பெயர்களும் நடந்த சம்பவங்களும் அவை கச்சிதமாகத் திட்டமிட்டு நிறைவேறியுள்ள விதமும் ஏதோ பெரும் திட்டமொன்றின் முன்னோடியென்பதை யாதவ இளவலுக்குப் புரிய வைத்தன.

இரு புரவிகளும் யாதவ எல்லையை நோக்கி விரைந்து கொண்டிருந்தன.

காகதியரின் இரண்டாவது தலைநகரமாக இருந்ததும் கிழக்குக் கடற்கரையில் முக்கியத் துறைமுகமாக விளங்கியதுமான நெல்லூர் புரத்துக் கோட்டை அமளி துமளிப் பட்டுக் கொண்டிருந்தது. பவநாசினி நதியில் கட்டாய ஸ்நானம் செய்து வைக்கப்பட்டு பாவங்களையும் கையில் சிக்கிய யாதவ இளவலையும் தொலைத்து விட்ட ருத்ராம்பாள் அசல் ருத்ர தேவியாகவே கோட்டைக்குத் திரும்பியிருந்தாள்!

கரையேறியதும் உடன் நதியில் விழுந்து எழுந்து வந்த வீரர்களை யாதவ இளவலைத் தொடர்ந்து செல்ல உத்தரவிட்டவள், தனியாகவே கோட்டைக்குத் திரும்பியிருந்தாள். புழுதி பறக்கப் புயலாக வந்த அவள் புரவியின் வேகமும், புரவியின் கயிறுகளை வீரர்களை நோக்கி எறிந்துவிட்டு, நிலம் அதிர தட்தட்டென்று அரண்மனைக்குள் நுழைந்தவளின் கோபமும், அதித சினத்தில் சிவந்து கிடந்த அவள் முகமும் ஏதோ விபரீதம் நேர்ந்திருக்கிறதென்பதை அரண்மனை வீரர்களுக்கும் பணியாட்களுக்கும் புரிய வைத்துவிட்டதால் அவளது அறைக்குள் நுழையவோ விசாரிக்கவோ அஞ்சியவர்கள் அச்சத்துடனேயே உலவினார்கள். இளவரசிக்கு உணவுத் தட்டுகளுடனும் கனிகளுடனும் உள்ளே நுழைந்த பணிப் பெண்கள் இரண்டாவது கணத்தில் அலறியபடி வெளியே ஓடி வந்தார்கள். அவர்கள் கொண்டு சென்ற தட்டுக்களும் கனிகளும் அவர்கள் பின்னால் பறந்து வந்தன. அறைக்குள் பொருட்கள் தடால் தடாலென்று உருளும் ஒலிகளும் தொடர்ந்து ஒலித்தன. வாயிலில் நின்ற காவலர்கள் வேல்களுடன் உயிரையும் கையில் பிடித்தபடி நின்றிருந்தனர்.

அரண்மனையின் கிழக்குப் பகுதியில் ஸ்தானிகளுடன் ஏதோ விவாதித்துக் கொண்டிருந்த காகதீய மன்னனுக்கு இளவரசியின் வருகையும் பணிப் பெண்கள்படும் அவதியும் தெரிவிக்கப்பட்டன.

உடனே அவன் இளவரசியின் அறையிருந்த மேற்கு வளாகத்தை நோக்கி நடந்தான். அவளது அறையை நெருங்க நெருங்க ஏதோ நடந்து முடிந்த போர்க்களத்தைப் பார்வையிடும் உணர்வு வந்தது காகதீய மன்னனுக்கு. மன்னனைக் கண்ட வீரர்களும் பணியாட்களும் ஆறுதல் பெருமூச்சு விட்டுக் கொள்வதும் புரிந்தது அவனுக்கு.

மன்னன் வருகையை அறிவிக்க, இளவரசியின் அறைக்குள் நுழைந்த வீரன் தலை தெறிக்கத் திரும்பி ஓடிவந்தான். அவனைத் தொடர்ந்து உள்ளே நுழைய முற்பட்ட மன்னனை நோக்கி மலர்களை வைக்கும் கனத்த குவளையொன்றும் பறந்து வந்தது வேகமாக.

(தொடரும்)



# T.S.S. NIDHI LTD.

ESTD 1973

## THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Off. : 230, R.K. Mutt Road, Mylapore Madras - 600 004 Ph : 4942303/4943365

**BRANCHES**

**THIRUVANMIYUR :** 112, Thiruvalluvar Salai, Kamaraj Nagar, Madras - 41. Ph: 410058.

**TONDIARPET :** 667, T.H. Road, Madras - 81. Ph : 5950472. **SAIDAPET :** 11, Jones Road, Madras - 15. Ph : 4851468.

## FIXED DEPOSIT SCHEME

| Period (Months) | 12 | 24 | 36 | 60 |
|---|---|---|---|---|
| Rate of Int. P.A. | 17% | 18% | 19% | 20% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan) For Deposit of Rs. 1,000/-

| Period (Months) | 12 | 24 | 36 | 45 | 67 |
|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1190 | 1425 | 1760 | 2025 | 3025 |

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME

Minimum Deposit
Rs. 10,000/-

Period
12 Months

**20% p.a**
**MONTHLY INTEREST**

**21% p.a.**
**ANNUAL INTEREST**

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS)

## T.S.S. SPECIAL DEPOSIT SCHEME

Minimum Deposit Rs. 10,000/-

| Period (Months) | Maturity Value |
|---|---|
| 120 | Rs. 66,000 |
| 180 | Rs. 1,82,000 |

## RECURRING DEPOSIT SCHEME

Monthly Deposit Rs. 100/-

| Period in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Week Days | | Sunday | Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

## HIGH LIGHTS

- Recognised as a NIDHI COMPANY by Central Government of India.
- Company is in 23rd year of service.
- Transaction with members only. (Rupees two only for membership)
- Premature repayment facility as per terms and conditions.
- Monthly interest Warrants would be despatched in advance for the year of Deposit.

P.S. SAMBASIVAM - Secretary    G. KUMARAVELU - Vice-President    K.R.V. RAMANI - President

# பித்ருக்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன்
கிராண்ட் ஸ்வீட்ஸ்
வாங்கி
நல்லோர்களுக்கு
விநியோகம் செய்யவும்.

**திருமண வைபவங்களுக்கு:**

சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் முதலியவைச் செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

நெ. 24, 2வது
மெயின் ரோடு
காந்தி நகர்
அடையாறு
சென்னை - 20
போன் : 4915662
4914213

# மலடாகும் ஆபத்து! ஆண்களே ஜாக்கிரதை!


• குழந்தையே இனி பிறக்காதா?

இன்னும் ஐம்பதே வருடங்களில் சராசரி மனிதன் அப்பா ஆக முடியாத நிலை தோன்றி விடுமாம்!

இப்படி ஓர் அணு குண்டுச் செய்தியைப் போட்டு உடைத்திருக்கிறார்கள் ஸ்காட்லாந்தைச் சேர்ந்த சில விஞ்ஞானிகள். இருபத்தோரு நாடுகளைச் சேர்ந்த ஆண்களை ஆராய்ச்சி செய்த பிறகு இந்தக் கண்டு பிடிப்பை 'பிரிட்டிஷ் மருத்துவ ஜர்னலில்' வெளியிட்டிருக்கிறார்கள் அவர்கள். இப்படி ஒரு முடிவுக்கு அவர்கள் ஏன் வந்தார்கள்?

உடலுறவின்போது பல கோடிக்கணக்கான ஸ்பெர்ம்கள் விந்துவில் வெளியாகின்றன. என்றாலும் பிறப்புறுப்புப் பாதையைக் கடந்து பெண்ணின் கருமுட்டையை அடையும் சக்தி அவற்றில் மிகச் சிலவற்றுக்கே உள்ளன. இதன் காரணமாகத்தான் ஒரு கியூபிக் மில்லிமீட்டர் விந்துவில் குறைந்தது இரண்டு கோடி ஸ்பெர்ம்களாவது வெளிப்படும்படி இயற்கை அமைத்திருக்கிறது. இந்த அளவுக்கு ஸ்பெர்ம்கள் இல்லாவிட்டால் ஒருவருக்குத் தந்தையாகும் வாய்ப்பு குறைவு என்று மருத்துவர்கள் கருதுகிறார்கள்.

1970க்குப் பிறகு பிறந்த ஆண்களிடத்தில், 1959க்கு முன் பிறந்த ஆண்களினுடையதை விட 25 சதவீதம் குறைவாகவே ஸ்பெர்ம்கள் உள்ளது தெரிய வந்திருக்கிறது. அதாவது வருடத்திற்கு 2.1 சதவீதம் என்கிற அளவில் ஸ்பெர்ம்களின் செறிவு குறைந்து கொண்டு வருகிறது! போனஸாக மற்றொரு சோகத் தகவலையும் அளித்திருக்கிறார்கள் இந்த விஞ்ஞானிகள். அப்படிக் குறைந்த எண்ணிக்கையில் வெளிப்படுபவற்றிலும், ஆரோக்கியமான ஸ்பெர்ம்களின் விகிதம் முன்பைவிடக் குறைந்துள்ளதாம்!

நியூயார்க்கிலுள்ள இனப்பெருக்க ஆராய்ச்சி மையமும் இந்த முடிவுகள் உண்மையைப் பிரதிபலிப்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறது!

விந்தணுக்களின் எண்ணிக்கை இப்படி இறங்குமுகத்தில் இருப்பதற்குப் பல காரணங்களைக் கூறுகிறார்கள் ஆராய்ச்சியாளர்கள். மன இறுக்கம், புகைப்பழக்கம், போதை மருந்து ஆகியவற்றோடு, பழைய காலத்து லூஸான உள்ட்ராயர்களுக்குப் பதிலாக, இறுக்கிப் பிடிக்கும் 'ப்ரீஃப்'களுக்கு ஆண்கள் மாறியதும் ஒரு காரணமாம்.

'களவாடப்படுகிறது நம் வருங்காலம்' என்கிற நூலை சமீபத்தில் எழுதியுள்ள டாக்டர் டட்டன் என்பவர் மேலும் சில காரணங்களைப் பட்டியலிட்டிருக்கிறார். உலகெங்கிலுமுள்ள நீர், காற்று, நிலபரப்பு ஆகியவை அசுத்தமடைந்து வருகின்றன. அவற்றில் சிறு சிறு ரசாயனப் பொருள்கள் ஒட்டிக் கொண்டிருக்கின்றன. போதாக்குறைக்கு பூச்சிக்கொல்லி மருந்து என்ற வடிவில் அடிக்கப்படும் ரசாயனங்கள் வேறு, உணவுப் பொருள்களில் கலந்து விடுகின்றன. இவை தான் விந்தணு எண்ணிக்கை வீழ்ச்சிக்குக் காரணமாம்.

-ஜி.எஸ்.எஸ்.

# முதுகெலும்பு

பூ.சொல்விளங்கும் பெருமாள்

எத்தனை ஊர்த் தண்ணியைக் குடிச்சாச்சு; எத்தனை நாற்காலிகளைத் தேய்ச்சாச்சு; மேலாளரான பின் இந்தப் பத்தாண்டுக் காலமாக இதே ஆபீசு இதே மேசை, இதே விசிறி. முன்னால பின்னால இருந்தவங்கல்லாம் மாறிப் போயிட்டாங்க; ஆபீசர் மாறிக்கிட்டே இருக்காங்க; பியூன் சுப்பராஜும் நானும் மாறல்ல.

சின்ன வயது பெரிய வயது அதிகாரிகளுக்கு முன் வெற்றுச் சிரிப்புச் சிரித்தாயிற்று; தலையைச் சொறிந்தாயிற்று.

வெயிலுக்கும் மழைக்கும் எடுத்த குடை இப்போது உடம்பில் ஒரு உறுப்பாகி விட்டது. ஒரு காலத்தில் 'பெஸ்ட்-ட்ரெஸ்ட்-மேன்' என்று பாராட்டப்பட்ட இதே அரவிந்தன் இப்போது தன்மீது கிடந்து பழகிவிட்ட துணிகளின் கசங்கலுக்கு வருந்தவில்லை.

அரவிந்தனின் இரண்டு பையன்களும் படித்துக் கொண்டிருந்தார்கள். பெண்கள், தங்களுக்கும் தங்கள் திருமணத்திற்கும் இடையே பண சிவதனுசுவைப் போட்டுக் கொண்டு இராமன்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அரசாங்கக் கடனில் கட்டிய வீட்டிற்கு மாதா மாதம் தவணை ஒழுங்காகக் கட்ட வேண்டும்; தீபாவளிக்கு வாங்கிய துணிக் கடன் கட்ட வேண்டும். கட்ட வேண்டும் என்றுதான் அரவிந்தன் நினைக்கிறார். கிளைக் கால்வாய்கள் பிடுங்கிக் கொண்டு போய் விடுகின்றன. மொத்தத்தில் குடும்ப வயலில் வெடிப்புகள்தான் அதிகம்.

அரவிந்தனுக்குக் காலத்திற்கேற்ப லஞ்சம் வாங்கும் சாமர்த்தியமும் இல்லை. இந்தக் காலத்தில் அதற்குச் சாமர்த்தியம் தேவை இல்லை. உணவுப் பண்டங்களின் விலையை எழுதிப் போட்டிருப்பதைப் போல்தான் லஞ்சமும். இதற்கு இவ்வளவு என்று எழுதிப் போடாத குறை ஒன்றுதான். அரவிந்தன் இதற்குப் பழக விரும்பாதவராகக் காலம் கழித்து விட்டார்.

கபாலீசுவரன் இப்போது அதிகாரியாக வந்து சேர்ந்தார். அவர் மாதச் சம்பளத்தையும் அரசாங்கம் கொடுக்கும் லஞ்சமாக எண்ணும் உள்ளம் கொண்டவர்.

அரவிந்தனின் சட்டைக்குப் பைகளே இல்லை; கபாலீசுவரனின் சட்டை, பைகளால் மறைந்து இருக்கும்.

பணியாள் சுப்புராஜ், அரவிந்தனை வந்து கூப்பிட்டான். அலுவலரின் அறையைக் கை காட்டினார். மறுநிமிடம் கபாலீசுவரனின் மேசையின் முன் அரவிந்தன் போய் நின்றார்.

'ஏன்யா, என்னைவிட இரண்டு கழுதை வயசிருக்கும் உனக்கு; கொஞ்சமாவது அறிவிருக்காய்யா?" என்று கத்திய கபாலீசுவரன் தன் கையிலிருந்த ஃபைலை அரவிந்தனின் முகத்தில் விட்டெறிந்தார்.

அரவிந்தனுக்குத் திகைப்பு. நெற்றியைச் சுருக்கிக் கொண்டு, அரண்டு அதிகாரியையே பார்த்தார்.

"என்னையா முறைக்கிற?"

'ஏண்டா நீ எல்லாம் ஒரு ஆளு, லஞ்ச திற்காகப் பொறுக்கித் திங்கிற நாய், என் மகன் வயசு இருப்பியாடா கழுதை! இப்ப இதே ஃபைலாலயே உன்னை அடிச்சி நொறுக்கினா எவண்டா கேட்பான்; பிடிடா என் ராஜினாமாக் கடிதத்தை; ஒரே மாசத்துக்குள்ள உன்னை ஜெயிலுக்கு அனுப்பல்ல, என் பேர் அரவிந்தன் இல்லையடா! முழிக்காதடா முட்டாள் கழுதை; இதோ பிடிடா என் ராஜினாமாவை' என்றெல்லாம் பேச நினைத்தார்!

இதை மட்டும் நினைத்திருந்தால் கபாலீசுவரனுடைய கபாலத்தையே உடைத்திருப்பார். அவரது மன ஓட்டத்தில் இது மட்டுமா வந்தது?

திருமணத்திற்கு நிற்கும் இரண்டு பெண்கள்; மாதா மாதம் கட்டணம் கட்டிப் படிக்கும் இரண்டு மகன்கள்; கல்வித்துறை, செய்தித் தொடர்பு, பால்வளம், உணவுத்துறை, உளவுத் துறை, உள்துறை என்று பல துறைகளுக்குத் தலைமை தாங்கி ஒரு அரசாங்கமே நடத்தும் தன் மனைவி- இவர்கள் எல்லோரும் அல்லவா நினைவுக்கு வந்தார்கள்?



உடனே தனது கற்பனை இராஜினாமாக் கடிதத்தை மெதுவாகக் கசக்கித் தன் சட்டைப் பைக்குள்- சட்டைப் பைதான் கிடையாதே- தன் இடுப்பில் செருகிக் கொண்டார். எல்லாம் கற்பனையில்தான்.

''எக்ஸ்க்யூஸ் மி சார், மே ஐ கோ'' என்று கிலிகத்துத்தான் காட்ச் பிடித்த கோப்பை அதிகாரியின் மேசைமீது மெதுவாக வைத்தார்.

''அட போய்யா; நீ பாஸ் பண்ணினாத்தான் இந்த ஃபைல் பாசாகுமோ? இவரு பெரிய மம்மாக் கொடுக்கு.''

''சார் அந்தக் காண்ட்ராக்டர் இதுக்கு முந்திய வேலையையே ஒழுங்கா முடிக்கல்ல; அதில்லாமலும்...''

''அட நிறுத்துய்யா! பெரிய அரிச்சந்திரன்! என் கண் முன்னே நிக்காதய்யா. சொல்றேன் கேட்டுக்க. இன்றைக்குக் காலையில் நீ அரை நாள் லீவு. நீ லீவுங்கிறதுனால இந்த ஃபைலை கே ஒன் பார்க்கிறாரு. புரியுதா? போ.''

இத்தனை ஆண்டு அனுபவம் உள்ள அரவிந்தனுக்கா புரியாது? கே. ஒன். என்கிற கிளார்க், அந்த அயோக்கிய காண்டிராக்ட்காரனுக்குச் சாதகமாக இந்தக் கோப்பை எழுதி முடித்துக் கபாலீசுவரனுக்கு லஞ்சத் தரகனாக



"பணம் வந்ததும் திமிரைப் பாருங்க!"
"ஏன் என்னாச்சு?"
"தலைக்கு ஷாம்பு வேணும்னு கேக்குறான்"

- வேல்முருகன்

---

மாறப் போகிறான்.

ம். அலுவலகத்திற்குப் போன பின்னும் அரவிந்தனுக்கு அரைநாள் விடுப்பு!

முன்பும் எத்தனையோ அலுவலர்கள் சீண்டி இருக்கிறார்கள்; திட்டியிருக்கிறார்கள். ஒரு அலுவலகத்தில் இதெல்லாம் சாதாரணம் தான். ஆனால் இப்படி ஒரு அநியாயத்திற்குத் துணை போகவில்லை என்பதற்காக யாரும் கோப்பால் அடிக்கவில்லை. அவமானப்படுத்தவில்லை.

இராமாயணப் போரில் இராமன் தோற்றது போல் ஆகிவிட்டது!

மாலையில் அரவிந்தன் வீட்டிற்குப் போனார். தன் நாற்காலியில் உட்காராமல், மூலையில் கிடந்த சாய்வு நாற்காலியைத் தேடி எடுத்துப் போட்டார். அதில் சாய்ந்தார். முதுகு வளைந்து கொடுத்தது.

உள்துறைச் செயலகத்திலிருந்து, அம்மையார் ஒரு காப்பித் தம்ளருடன் வெளிப்பட்டார்.

'இனி எல்லாம் நாமதான் சாகணும்' என்று அம்மையார் முணுமுணுத்தார்.

"ஏன் ஒரு மாதிரி இருக்கீங்க. இது என்ன ரசிச் சேர்ல? ஒரு நாளும் இல்லாத திருநாளா? என்ன செய்தி?"

"ஒண்ணுமில்லே; ஏன் முணுமுணுத்துக் கிட்டே வர்றே?"

"வேலைக்காரி நின்னுட்டா!"

"ஏன்?"

"ஒண்ணும் சொல்லலீங்க; இங்கேயும் அங்கேயும் அழுக்கா இருக்கே, பாத்திரத்தை ஒழுங்காத் தேய்ச்சுப் போடப்படாதான்னேன்."

"தப்பைத்தானே கண்டிச்சிருக்கே?"

"ஆய்னா, ஊய்னா, என்னைப் பிச்சைக் காரின்னு நெனச்சியா? பொறுக்கித் திங்கிற பிறவின்னு பாத்தியா? வல்லடியும் சொல்லடியும் பட்டுக்கிட்டு வயிறு வளர்க்கிற வேலை நமக்குக் கிடையாது. மரியாதை இல்லாத இடத்தில மானம் உள்ளவ இருப்பான்னு நினைச்சியா? அப்படின்னா, இப்படின்னா, என்னமோ 'மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதுவோங்'கிற கணக்கா கிளம்பிட்டா."

உள்ளே 'உஸ்'னு ஒரு சமையல் சத்தம் கேட்டதும் அம்மையார் உள்ளே போய்விட்டார்.

தலைக்கு இசைவாகக் கையைக் கொடுத்துக் கொண்டு மோட்டு வளையைப் பார்த்தார் அரவிந்தன். சே. இவளல்லவா பெண்! ஒரு வேலைக்காரப் பெண்ணுக்குள்ள மானமும் ரோஷமும் எனக்கு இல்லாமப் போச்சே. அவன் பேசறது அநியாயம்னு தெரிஞ்சும் கடச்கட நாலு வார்த்தையை விட்டு எறிய முடியல்லையே.'

மீண்டும் உள்துறை வந்தது.

"போனாப் போறாங்க. நாம என்ன ஐயாயிரம் பத்தாயிரம்னா சம்பளம் கொடுக்கிறோம். ஐம்பது நூறு; எங்க வேண்ணாலும் கிடைக்கும்கிற அந்தத் திமிர். பாத்திரத்தை என் மூஞ்சியில எறியாத குறையா வீசுறா!"

பழையபடியும் போய் விட்டார்.

'ஆமா அந்த ஃபைலை என்னால அவன் முகத்தில் தூக்கி எறிய முடியல்லையே. வேலைக்காரி இந்த வேலையை விட்டுட்டான்னா அடுத்த நிமிடமே இன்னொரு வீட்டில வேலையும் கிடைக்கும். கூடுதலா சம்பளமும் கிடைக்கலாம். ஆனா நம்ம நிலை? அதைவிட்டா வேற வேலை கிடைக்குமா? அது இல்லைன்னா எது? இந்தச் சாய்வு நாற்காலிதானே?'

மீண்டும் அம்மையார் வந்தார்.

"கைவசம் தொழில் இருக்குங்கிற திமிர்."

"ஆமா ஏதோ ஒரு சின்னக் கோபம்தானே. மறுபடியும் அவளைக் கூப்பிட்டா என்ன."

"அதுதானே கூப்பிட்டா என்ன?"

"அப்போ கூப்பிடவா?"

"நீங்களா..?"

"ம்!!"

'ஒரு வளையாத முதுகெலும்புள்ள பெண்ணை ஒரு ரோஷமுள்ள, தன்மானமுள்ள பெண்ணை, வேலையைத் தூக்கி எறியத் துணிச்சலுள்ள பெண்ணைப் பார்க்க வேண்டும். முதுகெலும்புள்ள ஓர் உயிராவது இந்த வீட்டில் இருக்க வேண்டும்' என்ற எண்ணத்தோடு அவளை அழைக்க அரவிந்தன் புறப்பட்டுப் போனார்.



# ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே

மினிமம் பட்ஜெட்டில் மசாலாக்கள் எடுத்துக்கொண்டிருந்த டைரக்டர் செந்தில் நாதன், புதிய முயற்சியாக நேற்றைய அரசியலைத் தொட்டிருக்கிறார். கண்ணில் நீரல்ல; ரத்தம் வரவழைக்கிற காரம்!

கதையைப் பாருங்கள்: (ofcourse, தெரிந்தது தான்!) முதல்வருக்கு நெருக்கமான ஒரு தோழி. நடந்துவரும் நகைக்கடை. தலையில் ஆணவமும் கையில் அதிகாரமும் ஏரான கறுப்பு பிஸினஸும் கரன்ஸி புழக்கமும் காண்கிற இடத்தையெல்லாம் வாங்குகிற வழக்கமும் கொண்டவர். அவர் ஆட்டுவிக்கிறபடி ஆடுகிற முதல்வர்-நண்பர். கையாலாகாத போலீஸ் இலாகா. ஆகவே மாநிலத்தில் ஏராள அநியாயங்கள்.

இதற்கு மேலும் சொல்ல வேண்டுமா? வழக்கப்படி ஒரு நேர்மையான போலீஸ்காரர் வருகிறார். அம்மணியின் முகத்திரைகளைக் கிழித்து, கபம் போட வைக்கிறார் என்பது ஒருபுறம் இருக்கட்டும்.

அசாதாரணத் துணிச்சலுடன் சமகால அரசியலைக் கிண்டலடித்திருக்கிற விதம் மிக நயமாக இருக்கிறது. வசனங்களில் மிளகாய்ப் பொடி தடவி, கருக் கருக்கென்று ஏற்றுகிறார்கள். (உதா: "நாடு சுடுகாடானாலும் நான் நடக்கிற இடம் புல்வெளியா இருக்கணும்!"-இது அந்தத் தோழி பேசுகிற வசனம். "சிந்திக்க மட்டும் தெரிஞ்சவன் அறிவாளி; நடிக்கவும் தெரிஞ்சவன் அரசியல்வாதி"- இது ஒரு இடம்.)

ஒன்று பாக்கி இல்லை. அமலாக்க விவகாரம், சி.பி.ஐ. ரெய்டு, வளர்ப்பு மகன் திருமணம்... அட, எஸ்.டி.எஸ்ஸின் 'தொங்கல் வைபவம்' வரைக்கும் பிடித்துக் கிழித்திருக்கிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளவும்.

ஜொலிக்கும் நகைகளுடன் உலாவரும் ஜெயபாரதி பின்னி எடுத்திருக்கிறார். அந்த அலட்சியமும் எக்காளமும் கடைந்தெடுத்த வில்லத்தனமும்.... (இன்ஸ்பிரேஷன் நிஜமாகவே யாருங்க மேடம்?)

வில்லத்தனம் மட்டுமின்றி, காரெக்டர் ரோலிலும் பிரகாசிக்க முடியும் என்பதை நிரூபித்திருக்கிறார் மன்சூர். உருக்கமான அந்த 'மருமகன்' கேரக்டருக்கு அவரது சொந்தக் குரல்தான் உதவவில்லை. ஒரு நல்ல டப்பரின் உதவியை நாடி இருக்கலாம்.

வழக்கமான சினிமாத்தன ஃப்ளாஷ்பேக், சாத்தியமே இல்லாத அந்தக் கல்யாண மண்டப கிளைமேக்ஸ், அனாவசியத்துக்கு ராஜஸ்ரீயுடன் ஒரு டூயட்-இதையெல்லாம் தவிர்த்திருக்கலாம்தான்.

ஆனாலும் 'Main thread'ன் இறுக்கம், வேகம் முன் இவை ஒரு பொருட்டாக இல்லை என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

எலெக்ஷனுக்கு முன்னால் ரிலீஸ் ஆகியிருந்தால் அந்த நாலு சீட் கூட கிடைத்திருக்குமா என்பது சந்தேகம்தான்!

- தரமணி

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.

முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.

ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.

ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka




# சில்ட்ரன்ஸ் காலேஜ் அண்ட் கேரியர் ஃபண்ட்

**இப்போது முறையான 'ஸ்காலர்ஷிப் பேமெண்ட்களை' வழங்குகிறது. உங்கள் குழந்தையின் வளர்ந்து வரும் கல்விக்கான செலவுகளை இதன் உதவி கொண்டு நீங்கள் மீட்க முடியும். யூடிஐ-ன் சிசிஎஃப் திட்டத்தில் முதலீடு செய்து, உங்கள் குழந்தையின் எதிர்காலத்தில் முதலீடு செய்வீர்.**

## சிறப்பம்சங்கள்:

• 15 வயது வரையிலான குழந்தைகளுக்கான திட்டம். • குறைந்தபட்ச முதலீடு ரூ.2000/- மற்றும் அதற்கு மேல் ரூ.1000 த்தின் மடங்குகளில். • முகப்பு மதிப்பு: ரூ.10 என்றவாறு சம விலைக்கு அக்டோபர் 95-ல் விற்கப்பட்டது. அதற்கு பிறகு என்ஏவி அடிப்படையிலான விலைகளில் விற்கப்படுகிறது. • முழு ஆண்டு அல்லது அரை ஆண்டிற்கு செய்யப்பட்ட 'ஸ்காலர்ஷிப் பேமெண்ட்களில்' முதலீட்டிற்கான வளர்ச்சியைக் காண முடியும். • வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு 10(16)ன் கீழ் நன்கொடை பெறும் குழந்தைக்கு வரிச்சலுகை உண்டு.

**அதிகப்படியான விவரங்களுக்கு அருகாமையிலுள்ள யூடிஐ அலுவலகத்தையோ அல்லது தலைமை பிரதிநிதியையோ அணுகவும்.**

CHILDREN'S COLLEGE AND CAREER FUND
UNIT PLAN-93

சிசிஎஃப் திட்டத்தில் தற்போதுள்ள யூனிட்தாரர்கள் 'ஸ்காலர்ஷிப் பேமெண்ட்' வசதிக்கு என்ஏவி அடிப்படையில் மாற முடியும்.



யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா
உங்கள் ஒளிமயமான எதிர்காலத்திற்காக.

அனைத்து ம்யூச்சுவல்ஃபண்ட் மற்றும் செக்யூரிட்டி முதலீடுகள் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவை. செக்யூரிட்டி மார்க்கெட்டுகளை பாதிக்கும் காரணங்களால் திட்டங்களின் என்ஏவி மதிப்பு அதிகமாகலாம் அல்லது குறையலாம். கடந்தகால செயலாற்றல் எதிர்கால விளைவுகளைக் குறிப்பிடுபவை அல்ல. சில்ட்ரன்ஸ் காலேஜ் அண்ட் கேரியர் ஃபண்ட் திட்டத்தின் பெயரே தவிர திட்டத்தின் தரம், அதன் எதிர்கால ஆதாயம் அல்லது வருவாயை எவ்விதத்திலும் குறிப்பிடுபவை அல்ல. முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்குமாறு கோரப்படுகிறார்கள்.

**மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101**
**கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர், போன்: 214973 • சென்னை, போன்: 517101, 517190 • மதுரை, போன்: 38186 • திருச்சி, போன்: 760060**

0047/96 M TM A